# குமரகுருபரர் சரித்திரம்.

குமரகுருபரர் சுமார் இருநூறு வருஷங்களுக்கு முன் திருநெல்வேலியைச்சார்ந்த ஸ்ரீவைகுந்தமென்னும் பதியினில் சைவவேளாள குலத்திற்பிறந்தவர். இவர் ஐந்துவயதுவரையில் ஊமையாகவிருந்து அவ்வயதில் திருச்செந்தூர் முருகக்கடவுளின் அநுக்கிரகத்தால், திருச்செந்தூர்க்கந்தர் கலிவெண்பாவென்னும் பிரபந்தமும் பிறகு, மீனுக்ஷியம்மன் பிள்ளைத்தமிழ் என்னும் பிரபந்தமுமியற்றினர். இவர் துறவறத்தைக்கைப்பற்றித் தருமபுரமடாலயத் தம்பிரானை ஞானசிரியனுகப்பெற்று, அதுவரையில் தன் கல்வித்திறத்தாற்கிடைத்தபொருளைக் கொண்டு டில்லிப்பிரதேசத்தில் மடாலயங்கட்டி அங்கு அன்னதானஞ்செய்து வசித்திருந்து, அதிபாலிய தசையிலேயே விண்ணுலகடைந்தனர். இவர் செய்த பலநூற்களில் நீதிநெறிவிளக்கமுமொன்று.

நீதி - என்பது மனுமுதலியநூற்களில் விதிக்கப்பட்டவற்றைச் செய்தலும், விலக்கப்பட்டவற்றை ஒழித்தலுமாகிய முறைமை. நெறி - இம்முறைமையாகியவழி; விளக்கம்-இவ்வழியைக்காட்டுந்தீபம். இப்பொருளுள்ள இம்மூன்று சொற்களில் நீதி + நெறி, என்பதுபண்புத்தொகைநிலைத்தொடர், நெறி + விளக்கம், என்பது இரண்டாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகைநிலைத்தொடர். இப்படித் தொக்கி நின்ற, "நீதிநெறிவிளக்கம்" என்னும்பெயர், நீதியாகிய நெறியைவிளக்கிக்காட்டும் தீபம்போன்றநூலுக்கு இரண்டாம்வேற்றுமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக்காரண குறியாய்வந்தது. நீதிநெறி - என்பதைச் சம்பந்தப்பொருள்தாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடரொனலும் பொருந்தும். விளக்கம் - தொழிலாகுபெயர்.

ஸ்ரீ

# நீதிநெறிவிளக்கம்

நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் - நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று.

இதன் பதப்பொருள். இளமை-இளமைப்பருவம், நீரில்-நீரிலுண்டாகும், குமிழிஆகும்-குமிழிபோல நிலையில்லாததாகும் நிறைசெல்வம் -குறைவில்லாதசெல்வம், நீரில்-நீரினிடத்து. சுருட்டும்(காற்றினால்) சுருட்டப்படும், நெடுதிரைகள் ஆகும்-நெடுமையாகிய அலைகள்போல நிலையில்லாததாகும், யாக்கை-உடம்பு, நீரில் - நீரிலெழுதிய, எழுத்து ஆகும - எழுத்துப்போல நிலையில்லாததாகும். (ஆதலால்) நமரங்காள் - நம்மவர்களே, எமபிரான் - நமகடவுளுடைய, மன்று - சபையை, வழுத்தாதது - துதியாமலிருப்பது, என்னே - யாது காரணம்.(1)

கருத்து - இளமையும், செல்வமும், உடம்பும் நிலையில்லாதனவாதலால் விரைந்து கடவுளைத் துதிக்க வேண்டுமென்பது. ஆகும என்பதனைக் குமிழி, திரைக ளென்பவற்றோடுங்கூட்டுக. சுருட்டும் செயப்பாட்டு எதிர்காலப் பெயரெச்சம்; சுருட்டு-பகுதி, அ-சாரியை, ப்-சந்தி, படு-செயப்பாட்டு வினைப்பொருள்தரும்விகுதி, உகரங்கெடுதல் சந்தி, அனைத்தும் ஒருபகுதி, உம்- எதிர்காலப்பெயரெச்சவிகுதி, உகரங்கெடுதல், சந்தி. இப்படி முடிந்துநின்ற சுருட்டப்படும்- என்பது படு-விகுதிமுதலியவை தொகுக்கப்பட்டு நின்றது. குமிழி தொழிலடியாகப்

பிறந்தபெயர்; குமிழ்-பகுதி, இ-வினைமுதற் பொருள்தரும் விகுதி,இப்பகுதி முகிழ் என்னும் முதனிலைத் தனிவினைப்பெயர், தசை,சதை,என எழுத்து நிலைமாறிநின் முற்போல் நின்றசொல். வினைமுதற் பொருள்தரும் இகரவிகுதி புணர்ந்து கெட்டுநின்ற பெயராகிய திரை பன்மை விகுதியாகிய கள்விகுதியேற்று நின்றது.

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்- உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை.

இ - ள். அறம்- தருமத்தையும்,பொருள்- பொருளையும்,இன்பமும் - இன்பத்தையும், வீடும்-மோட்சத்தையும், பயக்கும்-கொடுக்கும், புறங்கடை-தலைவாயலில், நல் இசையும்-குற்றமில்லாத கீர்த்தியையும், நாட்டும்- நிலைபெறச் செய்யும், உறும் - மிகப்பெரிய, கவல் ஒன்று - ஒருகவலை, உற்றுழியும் - நேரிட்டவிடத்தும், கைகொடுக்கும் - உதவிசெய்யும், (ஆதலால்) சிறுஉயிர்க்கு- சிலவாழ் நாளையுடைய உயிர்களுக்கு, உற்ற துணை- நீங்காத துணை, கல்வியின்ஊங்கு- கல்வியினும் மேற்பட்டது, இல்லை - இல்லையாம். (2)

கருத்து. விதிவிலக்குகளைத்தெரிவித்துப்பொருள் தேடி யின்பத்தை அநுபவிக்கு முறையையும், மோக்ஷத்தையுந் தரவும், நல்லகீர்த்தியைத்தரவும், துன்பத்தினின்று நீங்கு விக்கவும் வல்லது கல்வி. இன்பம் பண்புப்பெயர் ;இன் பகுதி, பம்- பகுதிப்பொருள் விகுதி. இவ்வாறன்றி மாட்சிமை என்பது-போல, இன்-பகுதி; பு - பகுதிப் பொருள் விகுதி அம் அப்பொருளதாகிய விகுதிபோல் விகுதிஎனினும் பொருந்தும். பயக்கும் செய்யுமென் வாய்பாட்டெதிர்கால வினைமுற்று; பயஎன்னும் பெயரடியாகத் தோன்றிய பய-பகுதி,க்-சந்தி

கு-சாரியை, உம்-எதிர்கால முற்றுவிகுதி, உகரங்கெடுதல் சந்தியால் வர்தவிகாரம். இதுபெயரொச்சமே வினைமுற்றானது. கடைப்புறம் என்னும் ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர் பின்முன்னாக நிற்பதாதலால் புறங்கடை- இலக்கணப் போலி.

> தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கு
> மடங்கொன் றறிவகற்றுங் கல்வி - நெடுங்காமம்
> முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
> பிற்பயக்கும் பீழை பெரிது.

இ-ள். முற்றிழாய் -தொழில் முடிந்த ஆபரணத்தையுடையாளே, கல்வி - கல்வியானது, தொடங்குங்கால்-(தன்னை) ஆரம்பிக்குங்காலத்தில், துன்பம்ஆய்-துக்கத்தைத்தருவதாகி இன்பம் - சுகத்தை, பயக்கும்- (பின்) தரும், (அல்லாமலும்) மடம் - அறியாமையை, கொன்று- இல்லாமற் செய்து, அறிவு - அறிவை, அகற்றும் - விசாலமாக்கும், நெடுகாமம் - பெருங்காமமானது, முன் - ஆரம்பத்தில், பயக்கும்-கொடுக்கிற, சின்மைநீர - அற்பத்தன்மையுள்ள, இன்பத்தின்- சுகத்தைப் பார்க்கிலும், பின் - பின்பு, பயக்கும்-கொடுக்கிற, பீழை- துக்கம், பெரிது - மிகுந்ததாகும். (3)

எனவே கல்வியையே மிகுதியும் பயிலவேண்டும் என்பது பெறப்படுகிறது காலமென்னும்பெயர்,கால்-எனஅம்-கடைக்குறையாய் வந்தது. அகற்றும் பிறவினையாகிய வினைமுற்று. அகல் தன்வினைப்பகுதி,று-பிறவினைப்படுத்தும் விகுதி, லகரம் றகரமானது சந்தியால்,இவ்வாறுமுடிந்துநின்றஅகற்று-பகுதி, உம்- எதிர்காலவிகுதி, உகரங்கெடுதல்சந்தியால்வர்த விகாரம், இங்குபெயரொச்சம் வினைமுற்றாயினது. முன்,பின், என்பன,பண்புப் பெயர்கள்; முன்என்பது ஐ-விகுதி பெற்று முன்னை எனவும், பு-விகுதி பெற்று முன்பு எனவும், னர்-விகுதி

பெற்றுமுன்னர் எனவும், அம்-விகுதிபெற்று முன்னம் எனவும்வரும். பின்- என்பது அம்-விகுதி ஒழிந்த வற்றைப் பெற்றுவரும்.

கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே யீர்ங்கவியாச் - சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்தும்
செல்வமு முண்டு சிலர்க்கு.

இ-ள். கல்வியே - கற்றகல்வியே, கற்பு உடைய - கற்பையுடைய, பெண்டிர் (ஆக) -மனைவியராகவும், அப்பெண்டிர்க்கு -அம்மனைவியர்க்கு, ஈர்கவியே- இனிமையாகிய செய்யுளே செல்வப்புதல்வன் ஆக - செல்வப் புத்திரனாகவும், சொல்வளம் ஏ-(கேட்போர்க்குப் பொருள் தெரியச்சொல்லுகின்ற) சொல்லினது வளப்பமே, மல்லல்- மிகுதியாகிய, வெறுக்கை ஆக - பொருளாகவும், (இருந்தலும் அல்லாமல்)சிலர்க்கு-சிலருக்கு, மாண் அவை - (கல்வியறிவு கேள்விகளால்) மாட்சிமைப்பட்ட சபையை, மண உறுத்தும்- அலங்காரப் படுத்துகின்ற,செல்வமும் உண்டு-செல்வமும் உளதாம். (4)

மாணவை மண்ணுறுந்துஞ்செல்வமுண்டாதலருமைபற்றிச் செல்வமும் என்றதோடு சிலர்க்கென்றுஞ்சொல்லினர். ஏ - பிரிநிலை.''இருந்தலும் அல்லாமல்'' என்பது இசையெச்சம். உம்மை இறந்தது தழீஇயதனோடு உயர்வு சிறப்புப்பொருளது. உடைய என்னும் குறிப்புப்பெயரெச்சமும், ஆக என்னும் செயவெனச்சமும மாறு தொகுத்தலாய் நின்றன. பெண்டிரென்பது ஒருவர் மனைவியை வேறொருவர் சொல்லுங்கால் பன்மையாற் சொல்லுதல் முறைமை யாதலால் அவ்வாறுஉயர்வு பற்றிவந்தபால் வழுவமைதி; பெண்டிர்பண்டியாகப் பிறந்தபெயர்;பெண்டு பகுதி,இர்-பலர்பாற் படர்க்கை விகுதி,உகரங், கெடுதல்சந்தியால்வந்தவிகாரம்.பெண்டு-பண்பு

ப்பெயர்; பெண்-பகுதி, து - பகுதிப் பொருள்விகுதி, தகரம் மானது டமர சந்தியால்.

எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்
துய்த்துணர் வில்லெனினில்லாகும்-உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை யின்றெனி னென்னு மஃதுண்டேல்
பொன்மலர் நாற்ற முடைத்து.

இ- ள். எத்துணைய ஆயினும்-எவ்வளவின ஆனாலும், இடம் அறிந்து- நல்ல ஆசிரியனையடுத்து, கல்வி - கல்விகளை, உய்த்து உணர்வு - ஆராய்ந்து அறிதல், இல் எனின் - இல்லையானால், இல் ஆகும்-(அக்கல்வியாற்பயன்) இல்லையாம், உய்த்துணர்ந்தும் - அவ்வாறு ஆராய்ந்தறிந்தும், சொல்வன்மை-(பிறருக்கு ஏற்கச்சொல்லும்) சொல்லினதுவன்மை, இன்று எனின்-இல்லாவிட்டால், என் ஆம்- என்னபயன்படும், அஃது உம் உண்டு ஏல்-அச்சொல்வன்மையும் உண்டானால், பொன் மலர்-பொன்னாற் செய்தமலர், நாற்றம் உடைத்து- மணமுடையது போலும். (5)

கல்வி:—கணிதம், எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம் முதலியபலவகைப்படுதலால், அதனை எத்துணைய எனப்பன்மையாற் சொல்லினர். எத்துணைய வாயினு மென்ற உம்மை மிகுதி குறைவு இரண்டிற்கும் பொதுவாய் நிற்றலால் உயர்வு சிறப்பினோடு இழிவுசிறப்பிலும் வந்தது. அஃதென்பதனீற்றில் இறந்தது தழீஇய எச்சவும்மை தொகுத்தல் பெற்றது. எல்-எனிலென்பதன்மரூஉ. பொன்மலர்- மூன்றும் வேற்றுமைத்தொகை நிலைத்தொடராகக் கொள்ளுதலே யன்றிப்பண்புத் தொகைநிலைத்தொடராகக் கொண்டு, பொன்னாகிய மலரெனவிரித்துப்பொருள்கொள்ளனுமாம். நல்லாசிரியனிடத்தே கல்வி கற்கவேண்டு மாதலால் இடம் அவனுக்காயிற்று. உம்மை உயர்வுசிறப்பு. "இல்ஆகும்" என்பதற்கு அவை கல்விகளல்ல என்பது கருத்து. உணர்ந்துமென்ற உம்மை உயர்வுசிறப்பு. என்-

எவனென்பதன் மரூஉ. போலும் என்பது சொல்லெச்சம்.

அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லார்
அவையஞ்சா வாகுலச் சொல்லும்-நவையஞ்சி
ஈத்துண்ணார் செல்வமு நல்கூர்ந்தா ரின்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று.

இ-ள். அவை- (கற்றவர்கூடிய) சபைக்கு, அஞ்சி- பயந்து, மெய்விதிர்ப்பார் - உடம்பு நடுங்குவோருடைய, கல்வியும்- கல்வியறிவும், கல்லார் - மூடர்களுடைய, அவை அஞ்சாத- சபைக்கு அஞ்சாத, ஆகுலச்சொல்லும்- ஆரவாரமாகியசொல்லும், நவையஞ்சி - (பொருள்தேடுங்காலத்தில் பழிபாவங்களாகிய) குற்றத்துக்குப்பயந்து, ஈந்து- (இரப்பவர்க்கு)கொடுத்து, உண்ணார் -(தாமும்) அநுபவியாதவருடைய, செல்வமும்- செல்வப்பொருளும்,நல்கூர்ந்தார்-தரித்திரருடைய,இன்னலமும் (ஈகைக்குண முதலிய) இனிமையாகிய நல்லதன்மையும், பூத்தலின்- உண்டாயிருப்பதினும், பூவாமை- உண்டாகாமையே, நன்று நல்லது. (6)

ஈந்து என்றதனால் இரப்பவரென்பது பெறப்பட்டது. ஈத்து- எதுகைத் தொடைநோக்கிவந்த வலித்தல் விகாரம். அஞ்சா-சீர்தளை நோக்கிவந்த தொகுத்தல்விகாரம். மெய்விதிர்ப்பார் திணைவழுவமைதி. ஈகைக்குணமுதலிய தன்மையாவன:—ஈகைக்குணம்,இளமை அழகு,கல்வியறிவு என்பன. "விதிர்ப்பார்" எதிர்கால வினையாலணையும்பெயராயினும் பகர இடைநிலை இயல்பு குறித்துநின்றது. நல்கூர்ந்தார்-நல்குரவு என்னுபெயரடியாகப் பிறந்த இறந்தகால வினையாலணையும்பெயர்; நல்கூர்-பகுதி, த்- சந்தி, த்-இறந்தகாலஇடைநிலை, ஆர்-படர்க்கை விகுதி, சந்தி த்தகரம் நகரமானது மெலித்தல் விகாரம்.

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன்வண் டமிழோர்க் கொவ்வான்-மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு.

இ-ள். வண்டமிழோர் - வளமாகிய தமிழ்ப்புலவர், செய்யும் - படைக்கின்ற, மற்று உடம்பு - (நூற்களாகிய) உடம்புகள், புகழ்கொண்டு - புகழை அடைந்து, மலரவன்செய் - பிரமன்படைத்த, வெறு உடம்பு - பயன்படாத உடம்புகள் மாய்வன போல - அழிவனபோல, மாயா - அழியா, (ஆதலால்) கலைமகள் - சரஸ்வதியினது, வாழ்க்கை - வாழ்க்கையானது, முகத்தது எனினும் - (இருவர்களும்) முகத்தினிடத்ததாயினும், மலரவன் - அப்பிரமன், இவர்க்கு - இத்தமிழ்ப் புலவர்க்கு, ஒவ்வான் - ஒப்பாகான். (7)

வண்டமிழோரென்பதை நாற்றடியிலும், அங்குள்ள இவர் என்பதை அசசொலுள்ள இடத்திலும் கூட்டிப்பொருள் சொல்லவும்-உம்மை உயர்வு சிறப்பு. முகத்தது-இடமடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று; முகம்-பகுதி, அத்து, அ சாரியைகள், து-ஒன்றன் படர்க்கை விகுதி,பகுதி ஈற்று மகரமும், சாரியை முதலகரமும், ஈற்றுகரமும் கெடுதல் சந்தியால்.மலரவன இடமடியாகப் பிறந்தபெயர் ; வினைமுதற் பொருளின்தன்மையுடைய விகுதியாகிய இகரம்புணர்ந்து கெட்ட,மலர்-பகுதி,அ- சாரியை,வ்-சந்தி, அன்- ஆண்பாற் படர்க்கை விகுதி பின்னுள்ளமலரவன் சுட்டுப்பொருளது.

வருந்தித்தாங் கற்றன வோம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் றொடங்கல் - கருந்தனம்
கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல்.

இ-ள். தாம் - தாங்கள், வருந்தி-வருத்தப்பட்டு, கற்றன-கற்றநூற்பொருள்களை, ஓம்பாது - (சிந்தித்தல் முதலானவற்றால்) பாதுகாக்காமல், மற்று சில உம்-வேறு சிலநூல்களையும், பரிந்து-வருந்தி, கற்பான் - கற்க, தொடங்கல் - ஆரமபித்தல், கைத்தலத்த- கையிலுள்ளனவாகிய, கருதனம-மிக்கபொருள்களை, உய்த்து - தாங்கிக்கொண்டு போய், சொரிந்திட்டு -எறிந்து, ஆங்கு-எறிநத இடத்தில், அரிப்பு அரிதது-அரிப்புத் தொழில்செய்து, (அதாவது அரித்து) எய்தநு-இளைத்துநின்று, பொருள் செய்திடல் - மறுபடி பொருள் சேர்த்தல்போலும. (8)

உமமை-இறந்தது தழீஇய எச்சவுமமை. அரிப்பரித்து என்பது போர்பொருதான் என்பதுபோல நின்றதாதலால் அதற்கு அரிப்புசெய்து எனப்பொருள் சொல்லப்பட்டது. இவ்வாறன்றி அரிப்பு - அரிப்புசகருவியால், அரித்து- (மண்ணை) அரித்து எனப்பொருளுரைத்தலும கூடும். அரிப்பு-தொழிலாகுபெயராய் அத்தொழிற் கருவியை உணர்த்தியதெனக் கொள்ளினும் பொருந்தும. அரித்து செய்யப்படுபொருள் குன்று வினையாதலால் மண் என்னும செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. கற்பான் எதிர்காலவினையெச்சம்; விகுதி, பான்.

எனைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலவாம் - மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமக னல்லறம்
பூண்ட புலப்படா போல்

இ - ள். மனை - இல்வாழ்க்கைக்கு, தக்காள் - தகுந்தவளாகிய மனைவி, மாண்பு - நற்குண நற்செய்கை, இலள் ஆயின் இல்லாதவளானால், மணமகன் - கணவன், பூண்ட - மேற்கொண்டன ஆகிய, நல்அறம் - நல்லதருமங்கள், புலப்படா

போல் - விளங்காதனபோல, இலம்பாட்டார் - தரித்திரரு டைய, கல்வி - கல்விகள், எனைத்துணைய எனும் - எவ்வளவு மிகுதியுடையன ஆனாலும், தினைத்துணையும்- தினையளவும், சீர்பாடு - சிறப்புண்டாதல், இல ஆம் - இல்லையாம். (9)

எனவே பொருளில்லாவிட்டால் கல்விசிறப்படையாதென்பது கருத்து-தினை-சிறுமைக்குக் காட்டியதோரளவை. எனை எத்தனை என்பதன்மரூஉ. தன்மைகளிரண்டில் முன்னது உயர்வுசிறப்பு; பின்னது இழிவு சிறப்பு. இலம்பாட்டார்- தொழிலடியாகப்பிறந்த பெயர்ச்சொல்; இலம்பாடு- பகுதி, ஆர் -பலர்பாற்படர்க்கை விகுதி. குற்றியலுகரமாதலால் பகுதிஒற் றிரட்டலும், உகரங்கெடலும் அடைந்த இலம், நலம்என்பது போன்ற அம்விகுதிப் பண்புப்பெயர். இப்பண்புப்பெயர் பெரும்பாலும் பாடென்னுந் தொழிற்பெயரைச் சார்ந்தேவரும். பாடு-படு என்னும் முதனிலைதிரிந்த தொழிற்பெயர்.

இன்சொலன் றாழ்நடைய னாயினுமொன் றில்லானேல்
வன்சொல்லி னல்லது வாய்திறவா - என்சொலினும்
கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன்ஞாலம்
பித்துடைய வல்ல பிற.

இ-ள். இன்சொலன் - இனிமையாகிய சொல்லையுடையவனாயும், தாழ் நடையன் - (தகுந்தவருக்கு) அடங்கி நடக்கும் ஒழுக்கமுடையானாயும், ஆயினும்-ஆனாலும், ஒன்றும் இல்லானேல் -பொருள் சிறிதும் இல்லாதவனாயின், கடல் ஞாலம்-கடலாற் சூழப்பட்ட உலகத்துள்ளார், வல் சொல்லின் - (அவன் முகமநோக்கி) கடுஞ்சொல் சொல்லுதலினின்றும், அல்லது- இன்சொல் சொல்லுதற்கு, வாய்திறவா-வாயைத்திறவார்கள், என் சொல்லினும - கடுஞ்சொல்லைச் சொல்லினும, கைத்து உடையான் - பொருளுடையானது, காற்கீழ் - காலின்கீழ், ஒதுங்கும் - அடங்கி நடப்பார்கள், (ஆதலால்) பித்து - பைத்

தியகுணத்தை, உடைய - உடையார்கள், பிற - நற்குணங் களையுடையோர்,அல்ல-அல்லார். (10)

ஒன்றென்னும் எண்ணலளவையை க்காட்டும் சொல் இங் குச்சிறுமையை க்காட்டுகின்றது. அரணீற்றில் இழிவு சிறப் போடு முற்றுப் பொருள்தரும் உம்மைதொக்கது. வன்சொல் லின்- இந்த ஐர்தனுருபு நீங்கற்பொருளது.

இவறன்மை கண்டு முடையாரை யாரும்
குறையிரந்துங் குற்றேவல் செய்ப-பெரிதுந்தாம்
முற்பக னோலாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று.

இ-ள். இவறன்மை - உலோபத்தன்மையுடையராயிருத்த லை, கண்டும்-அறிந்தும்,உடையாரை-செல்வமுடையவர்களை யாரும் -எல்லாரும், குறை -குறையாகிய பொருளை, இரந்து- யாசித்து, குறுஎவல் உம் - (அவர்) ஏவின சிறுதொழில்க ளையும், செய்ப-செய்வார்கள், முன்பகல் - முன்னாளில், பெரி தும்-மிகுதியும், நோலாதார்-தவஞ்செய்யாதவர், நோற்றாரை_ தவஞ்செய்தவரை, பின்செல்லல்-பின்றொடர்தல், கற்புஅன் றே-அறிவே ஆம். கல்லாமை அன்று-அறியாமை அல்ல.(11)

உலோபத் தன்மையுடையராயிருந்தலை அறிந்தபோது அவரைநெருங்கல் கூடாதாதலால், கண்டும் என்றவும்மையு ம், பெரிதும் என்றவும்மையும் உயர்வுசிறப்பு. இரந்தும் என் னும் உம்மையைக்குற்றேவலென்பதோடு கூட்டுக.இது இறந் தது தழீஇய எச்சவும்மை. ஏவல் தொழிலாகும்பெயர். கார ணவாகு பெயருமாம். இவறன்மை தொழிற்பெயர் ; இவறு பகுதி, அல் விகுதி, உகரங்கெடுதல் சந்தியால். மை விகுதி யார்-யாவ ரென்னும் வினைப்பெயரின் மரூஉ.

கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோ ரணிகலம் வேண்டாவாம் - முற்ற

முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரோ
அழகுக் கழகுசெய் வார்.

இ-ள். கற்றோர்க்கு- கற்றுணர்ந்தவருக்கு, கல்வி நலனே- கல்வியாலாகிய அறிவே, கலன் அல்லால் - ஆபரணம் அல்லாமல், மற்று ஓரணிகலம் - வேறோ ராபரணம், வேண்டா- வேண்டுவதில்லை, முழுமணி - பெருமணிகளால் செய்யப்பட்ட, பூணுக்கு- ஆபரணத்துக்கு-பூண்- வேருபரணம், முற்ற- ஒருகாலத்திலும், வேண்டா- வேண்டுவதில்லை, யாரோ - எவர்தாம், அழகுக்கு - அழகினுக்கு, அழகுசெய்வார் - அழகுசெய்பவர். (12)

மற்றோரணிகலம் என்பதற்கு மற்றோர்- செல்வப்பொருளுடையார், அணிந்துகொள்ளும் ஆபரணம், என உரைப்பினும் பொருந்தும். வேண்டா என்னுஞ்சொல் "அறந்தாரிது வெனவேண்டா" எனத்திருக்குறட் செய்யுளிலும் ஒருமைக்கண் பெரும்பாலும் வழங்கி வருதலால், இல் என்பது இல்லை என்பதன் கடைக்குறை என்பதுபோலக் கடைக்குறையி லடங்கும். கடைக்குறை விகாரம் பெருவிட்டால் வேண்டாதுஎனவரும. இது செயப்பாட்டு வினைமுற்றுதலால் படுவிகுதி முதலியன தொகுததல் எனகொள்க. ஆம அசை. அணிகலம் என்பதில் அணி- வினைதொகைக் குறிப்பாயினும் புணர்ச்சி வினைதொகை நிலைத்தொடராம். கலன்- இருகுறிலை அடுத்த மகரவீற்றுப்பெயராதலால் மகரத்துக்கு னகரம்போலியாகவந்தது. முன்னுள்ள ஏ பிரிநிலை; பின்னுள்ள ஏ உயர்வுசிறப்பு.

முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉம்
கற்றன மென்று களியற்க - சிற்றுளியால்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னால்.

இ-ள். கனங்குழாய்-கனமாகிய காதணியை யுடையாளே முற்றும் - எல்லாம், உணர்ந்தவர்- அறிந்தவர், இல்லை-இலர், (ஆதலால்) முழுவதும் - எல்லாம், கற்றனம் என்று - படித்த றிந்தோமென்று, களியற்க கர்வமடையவேண்டாம். (ஏனெனில்) கல்லும்-மலைகளும், சிறு உளியால்- சிறிய உளியினால், தகரும - உடையும், கொல் - கொல்லனுடைய, உலை - உலைக்களத்துள்ள, கூடத்தினால்-சம்மட்டியினால், தகரா அம்மலைகள் உடையா. (13)

ஒருவன் தன்னில்தன்னைப்பற்றி நினைக்கும்போதும், பேசும்போதும் தன்னைத்தனித்தன்மைப்பன்மையாகவைத்தல இயல்பாதலால் கற்றனமென்பது வழாநிலை. முன்னுள்ள உம்மைகளிரண்டும முற்றும்மை. பின்னுள்ள உம்மை உயர்வுசிறப்பு. கல்-காரணவாகுபெயர். கொல், சொல்லால் அஃறிணையும் பொருளால் உயர்திணையுமாகிய பெயர்.

> நமமின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
> அம்மா பெரிதென் றகமகிழ்க - தமமினும
> கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம
> எற்றே யிவர்ககுநா மென்று.

இ - ள். தமமின் - தம்மினும, மெலியாரை - எளியவரை, நோககி - பார்த்து, தமது உடைமை - தமமுடைய பொருள, அம்மா - ஆச்சரியம, பெரிது என்று - அதிகமானதென்று, அகம மகிழ்க - மனமகிழ்க, தமமினும - தமமைப்பார்க்கினும கற்றாரை - படித்தறிந்தவர்களை, நோககி - பார்த்து, நாமகற்றது எல்லாம - நாமகற்றதுமுழுதும, இவர்க்கு - இவரதுகல்விக்கு, எற்றே என்று - எத்தன்மையதாமென்று நினைத்து, கருத்தழிக - மனம வருந்துக. (14)

ஐந்தனுருபிரணடும எல்லைப்பொருளில் வந்தன. மெலியார்கு றிப்புவினையாலணையும்பெயா. உடைமை - பணபாகுபெயர்.

அம்மா-வியப்பிடைச்சொல். அகமகிழ்க,கருத்தழிக, என்பன, திணைவழுவமைதி.உம்மைஉயர்வுசிறப்பு.எல்லாமஎன்பதுஒருமையிற்பன்மை வந்தபால்வழுவமைதி,அன்றியும்இது,அவரெல்லாம,அவையெல்லாம,நாமெல்லாம்,நீரெல்லாமெனத்திணைக்குமஇடத்துக்குமபன்மைகுறித்துவருமபொதுவாகியபெயர.

கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படும் - இல்லார்
குறையிரந்து தமமுன்னர் நிற்பபோறருமும்
தலைவணங்கித் தாழப் பெறின்.

இ-ள். இல்லார் - (கல்விசெல்வப் பொருள்கள்) இல்லாதார், குறை - தமதுகுறைகளை, இரந்து-சொல்லியாசித்து, தம் முன்னர் - தமமெதிரில், நிற்பபோல - (தலைவணங்கி) நிற்பது போல, தாமும அவ்விருவகைச்செல்வமுடையாரும், தலைவணங்கி - தலையால்வணங்கி, தாழப்பெறின் - தாழ்ந்திருத்தல் கூடுமாகில், கல்வி உடைமை என்று- கல்வியை யுடையராதலும, பொருள் உடைமை என்று - பொருளுடையாராதலும, இரண்டுசெலவமும - ஆகிய இரண்டு செலவஙகளும, செல்வம எனப்படும-செல்வங்களென்று அறிவுடையோரால் சொல்லப்படும. (15)

தலைவணஙகுதலென்றது கர்வமில்லாமையை. கர்வமில்லாது தாழ்ந்திருந்தல் அவ்விருவகைச செல்வர்களுக்கும் ஒரு செல்வமென்பதும, அதனருமையுந்தோன்றத் தாழப்பெறினென்றார். உடைமை - இரண்டும குறிப்புத்தொழிற் பெயர். எண்ணுப்பொருளதாகிய என்றென்னும இடைசசொல்லை கல்வி யுடைமை என்பதனோடுங்கூட்டுக. எனப்படும- இடைசசொலடியாகப்பிறந்த செயப்பாட்டுவினைசெய்யுமென் வினைமுற்று. முன்னுள்ள உமமை முற்றுமமை, பின்னுள்ளது இறந்தது தழீஇயதோடு உயர்வுசிறப்பில் வந்தஉம்மை.

ஆக்கம் பெரியார் சிறியாரிடைப்பட்ட
மீச்செலவு காணி னனிதாழ்ப - தூக்கின்
மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலைக்கு.

இ-ள். ஆக்கம்பெரியார்-கல்வியாவது பொருளாவது மிகுந்தவர், சிறியாரிடை- (அவ்விருசெல்வமும்) குறைந்தவரிடத்து, பட்ட-உண்டாகிய, மீச்செலவு - வரம்புகடந்த நடக்கையை, காணின் - கண்டால், நனிதாழ்ப - மிகுதியுந்தாழ்வார்கள், தூக்கின்-உயர்த்துப்பிடித்தால், துலைக்கு-தராசில், மெலியது - இலேசானபொருளுள்ளதட்டு, மேல்மேல் - மிகமேலே,எழ-எழும்படி, செல்லச்செல்ல- உயருந்தோறும், வலிது அன்றே - கனமானபொருளுள்ளதட்டே, தாழும - தாழுகின்றது. (16)

ஆக்கம; ஆ-பகுதி, கு-சாரியை, அகு-எனமொழிற் றொடாக் குற்றுகரமாய் நிற்றலால், அமவிகுதிப் புணர்ச்சியில் ககரம இரட்டியதும உகரக்கேடும் சந்தியால்; இவ்வாறுமுடிந்துநின்ற தொழிற்பெயர்,ஒருவன் ஆதற்குக் காரணமாகிய செல்வத்துககானமையால் காரியவாகுபெயர்.இவ்வாறன்றித் தொழிலாகுபெயரெனினும,அம்-விகுதியைக் கருவிப்பொருளதெனக்கொண்டு தொழிலடியாகப்பிறந்த பெயரெனினும்பொருந்தும.

விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யும்
நலநசைகையார் நல்வினையுந் தீதே-புலப்பகையை
வென்றன நல்லொழுக்கி னின்றேம் பிறவென்று
தமபாடு தமமிற் கொளின்.

இ-ள். புலப்பகையை-(ஐந்துவிஷயமாகிய)பகையை,வென்றனம - ஜயித்தோம, நல்ஒழுக்கில் - நல்லொழுக்கத்தில், நின்றேம என்று - தவறாமல் நின்றோமென்று, தம்பாடு - தம்

பெருமையை, தம்மிற்கொளின் - தமக்குள்மதித்துக்கொள் வாராயின், விலக்கிய - (மநுமுதலிய நூல்களால்) விலக்கின கருமங்களை, ஓம்பி - செய்யாமற்காத்து, விதித்தனவே- விதித்த கருமங்களையே, செய்யும் - செய்தற்குரிய, நலத்தகையார் - நன்மையாகிய தன்மையுடையாரது, நல்வினையும் - நல்ல கருமமும், தீதே-பயனில்லதே ஆம். (17)

ஐந்துவிஷயமாவன :— சத்தம், பரிசம், உருவம், இரசம் கந்தமென்பன. இவை மனத்தை முறைநெறியிற் போகவிடாமல், தம்மை அநுபவிக்கும்பொருட்டு, துன்பத்தாலும், பாவத்தாலும் வரும்பொருள்களின்மேற்போக விடுதலால்புலப்பகையையென்றார். ஏ-இரண்டிடல் முன்னது பிரிநிலை, பின்னது தேற்றம். புலப்பகை உருவகமாதலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். ஒழுக்கு-உருகு உருக்கு;பெருகு பெருக்கு;என்பனபோல முதனிலை திரிந்த தொழிற்பெயர். பிற-அசை. நலத்தகையார்நல்வினை, தொழிற் பண்பு தற்கிழமைப்பொருட்டாகிய ஆறும் வேற்றுமைத்தொகைநிலைத்தொடர். உம்மை-உயர்வுசிறப்பு.

தன்னை வியப்பிப்பான் றற்புகழ்த றீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால் - தன்னை
வியவாமை யன்றே வியப்பாவதின்பம்
நயவாமை யன்றே நலம்.

இ-ள். தன்னைவியப்பிப்பான் - தன்னை (யாவரும்) உயர்வாக மதிக்க நினைப்பவன், தற்புகழ்தல்-தன்னைத்தானே புகழ்ந்துகொள்ளுதல், நல் நீர் - குளிர்நீரை, சொரிந்து- (அகலில்) வார்த்து, தீச்சுடர்-தீவிளக்கை, வளர்த்தற்று - எரித்ததுபோலும், (ஆதலால்) தன்னை-தன்னை, வியவாமை அன்றே-உயர்வாக மதியாதிருத்தலே, வியப்பாவது - மதிப்பென்பது, இன்பம்- ஒருசுகத்தையும், நயவாமை அன்றே-விரும்பாமையே, நலம்-இன்பமென்பது. (18)

வியப்பிப்பான் பிறவினையாகிய எதிர்காலவினையாலணை யும்பெயர். பான் -எதிர்காலவினையெச்சவிகுதி யெனக்கொண்டுஒருவன்தன்னைஉயர்வாகமதிக்கும்படிஎனச்சொல்லினும் பொருந்தும். தற்புகழ்தல்-இது இரண்டாம் வேற்றுமைத் தொகை யாதலால் ஈற்றுனகரம் நன்னூல் மெய்யீற்றுப்புணரியல்-கடு-கூ-"தன் என் என்பவற்றீற்று னவ்வன்மை, யோடுறழும் நின் ஈறியல்பாம் உறவே" என்பதனால் உறழாமல், ஈன்-சு-அடு-ஆம் சூத்திரத்தில் அன்னபிறவும் என்பதனால் திரிந்தேவந்தது.

பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான்யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு- பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்

இ-ள். பிறரால்-மற்றவரால், பெருசுட்டு - உயர்வாக மதித்தலை, வேண்டுவான் - (தான்அடைய)விரும்புவோன், யாண்டும்-மறக்கத்தக்ககாரணம் உண்டான இடத்தும், மறவாமே -மறவாமல், நோற்பது ஒன்று - ஆசரிப்பதாகிய ஒருகருமம், உண்டு - உளது, (அது)பிறர் பிறர் - மற்றவருடைய, சீர் எல்லாம் - சிறந்த ஒழுக்கங்களை எல்லாம், தூற்றி-பலர் அறியச் சொல்லி, சிறுமை- (அவர்களது) கெட்டசெய்கையை, புறம் காத்து - வெளிப்படுத்தாமல், யார் யார்க்கும்- எல்லோருக்கும், தாழ்ச்சி - வணக்கத்தைவெளிப்படுத்தும்சொற்களை, சொலல்-சொல்லுதலாம். (19)

கருத்தாப் பொருளதாகிய மூன்றுனுருபு சுட்டு என்னும் முதனிலைத்தொழிற் பெயரோடு முடிந்தது. ஒருவனிடத்துள்ள பெருமையை, அவனைச் சுட்டுதலின் மேலேற்றிப் பெருஞ்சுட்டென்றது ஒருமரபு வழுவமைதி. சுட்டு முதனிலைத் தொழிலாகுபெயராய்ச் சுட்டப்படுதலாகிய மதிப்புக்காயிற்று.

பிறர் - இடைச்சொலடியாகப் பிறந்தபெயர், பிற-பகுதி, ர்-ப லர் பாற் படர்க்கை விகுதி; அர்-விகுதி எனக்கொண்டு, பகுதி யீற்று அகரக்கேடாகிய கடைக்குறை பெற்றதென்றுவது, விகுதி முதல் அகரக்கேடாகி முதற்குறைபெற்ற தென்றுவ து சொல்லினும் பொருந்தும்.

கற்றுப் பிறர்க்குரைத்துத் தாநில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை-சொற்ற நீர்
நில்லாதசென்னென்று நாணுரைப்பநேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல்.

இ-ள். கற்று - நூல்களைக்கற்றறிந்து, பிறர்க்கு - மற்றவர்க்கு, உரைத்து - (நல்லொழுக்கநதை) சொல்லி, நில்லார்-தாம் (அவ்வொழுக்கத்தில்) நில்லாதவருடைய,வாய் - வாயினிடத்து, படும் உண்டாகும், வெறு உரைக்கு - பயனில்லாத சொல்லுக்கு, ஓர்வலியுடைமை - ஒருவல்லமையைக்கொண்டிருத்தல், உண்டு- உளது, (அதாவது) சொற்ற நீர், (எமக்கு நல்லொழுக்கத்தை) சொல்லிய நீர், நில்லாதது - (அவ்வொழுக்கத்தில்) நில்லாதகாரணம், என் என்று- என்ன என்று, நாண் - வெட்கம், உரைப்ப - வருத்த, ஒருவன்நேர்ந்து - ஒருவன் எதிர்த்து, சொல்லாமே - சொல்லாதபடி, சூழ்ந்து- ஆலோசித்துக்கொண்டு, சொல்லல் - சொல்லுதலாம். (20)

பயனுளசொல்லாயினும்நல்வழியில் நில்லார் வாய்ப்பட்டமையால்அது பயனிலதாயிற்று. வெற்றுரை - பண்புத்தொகை நிலைத்தொடர். சொற்ற - இறந்தகாலப்பெயரெச்சம், சொல்-பகுதி, ற்-இறந்தகாலஇடைநிலை,அ-பெயரெச்சவிகுதி, லகரம் றகரமானது சந்தியால்வந்தவிகாரம். நில்லாதது-காரிய வினையைக் காரணத்தின்மேலேற்றிச்சொல்லும் எதிர்மறை வினையாலணையும்பெயர் ; நில் - பகுதி, ல் - சந்தி, ஆ - எதிர்

மறைவிகுதி, அனைத்துமொருபகுதி, த் - எழுத்துப்பேறு, அ - சாரியை, து - ஒன்றன்பாற்கைவிகுதி.

பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார்
தமக்குப் பயன்வே றுடையார் - திறப்படூஉம்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை யேவல் கொளல்.

இ-ள். தாமகற்ற-தாமகற்றகல்வி யறிவாலடையும்செய்யுட்களை, பிறர்க்கு-அந்நியர்களுக்கு, பயன்பட - பிரயோசனப்படும்படி, விற்பார் (பொருளுக்காக) விற்கும்புலவர்கள், தமக்கு-தங்களுக்கு, வேறுபயன் - வேறுபலனை, உடையார்-உடையராவார், [அதுஎவ்வெனில்] திறப்படும்-வகைப்பட்ட, தீவினை-கொடுந்தொழிலுக்கு, அஞ்சாத-பயப்படாத, விறல்கொண்டு-வலிமையை அடைந்து, தென்புலத்தார் - பிதிர்தேவதைகளுக்கு, கோவினை - அரசனாகியயமனை, ஏவல்கொளல் - தொழில் கொள்ளுதலாம், அதாவது தம்மைத்தண்டிக்கச்செய்துகொள்ளல். (21)

பயன் - நரகில்படும்யாதனை ஆதலால் அதனை வேறுபயனென்றார். வகைப்பட்ட தீவினையாவன: நற்குண நற்செயல்களில்லானென அறிந்தும் பொருளுடையானை அவையுடையவனாகச் சொல்லுதலாகியபொய்யும், தெய்வங்களிடத்துள்ள குணத்தையும் செயலையும் எடுத்துஇவன் மேலேற்றுதலாகிய களவு முதலியவையுமாம். கற்ற-இறந்தகாலவினையாலணையும்பெயர்; இது, தன்காரிய மாகியசெய்யுளின்மேல்நின்றது. பிதிர்தேவதைகளுக்கு இடம் தென்றிசையாதலால் அவர்க்குத் தென்புலத்தாரெனப் பெயராயிற்று. தென்புலத்தார்-ஏழாம் வேற்றுமைத்தொகைநிலைத்தொடர்; விரிந்தால் தெற்கின்கணுள்ளபுலத்தாரெனவிரியும். புலம்-இடம். தெற்காகியபு

லத்தா ரெனப் பொருள்கொண்டால், வடமொழிப்பகுதி மட்டில் பண்புத்தொகைநிலைத் தொடரெனினும்பொருந்தும்.

சற்பன வூழற்றார் கல்விக் கழகத்தோங்
கொற்கமின் றாந்தைவா யங்காத்தல் - மற்றுத்தம்
வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல்.

இ-ள். சற்பன - சற்பதற்குரியகல்வியாளருக்கு, ஊழ் - நல்வினை, அற்றார் - இல்லாதவர், கல்விக்கழகத்து - கல்வி நிறைந்த புலவர்சபையில், ஒற்கம் - நாவடக்கம், இன்று - இல்லாமல், ஆந்தைவாய் - அசங்காதவாயை, அங்காத்தல் - திறத்தல், [எப்படியிருக்கிறதென்னில்], மா - மிருகங்களும், பறவை - பக்ஷிகளும், புல்உரு - புல்லாற்செய்யப்பட்ட உருவத்தைக்கண்டு, அஞ்சுவபோல் - பயப்படுவனபோல, மற்றுந்தம் - கல்லாத தம்முடைய, வல்லுரு - வலியஉருவத்தைக்கண்டு, அஞ்சன்மின் - அஞ்சாதிரும், என்பவே - என்று சொல்லுவது போலாம். (22)

நல்வினையை ஊழற்றார் - என்பது திணைவழுவமைதி. ஊழ்-முறைமை; அதுசெய்தமுறைமை தவறாதுவரும் வினைக்குப் பண்பாகுபெயராம். ஒற்கம்-தொழிற்பெயர்: ஒல்கு-பகுதி, அம்-விகுதி, உகரக்கேடுமெய், குற்றிய லுகரமாதலால் லகரத்திரிபும் சந்தியால்வந்தவிகாரம். அம - விகுதிப்புணர்ச்சியில் நாட்டமெனநெடிற்றொடரும், முடுக்கமென உயிர்த்தொடரும், அடக்கமென மென்றொடரும், குற்றமென முற்றிய லுகரமும் விகாரப்படல்காண்க. கழகமென்பது - கல்வி, சூது, ஆயுதம், மல், இவைபயிலும் இடங்களுக்குப்பெயராயினும் கல்வி என்னும் அடையால் புலவர்சபையை உணர்த்தியது. உரு-பண்பாகுபெயர். சொல்லுதலென்பதினின்றும் பிரித்தலால், ஏ-பிரிநிலை. மாபறவை-அஃறிணையும்மைத்தொகையாதலால்

இவ்வாறு பன்மைமீறு பெருதும், மாபாவைகள்மனைட்டமையீறுபெற்றுமவரும்.

கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉம்
குற்றந் தமதே பிறிதன்று - முற் றுணர்ந்தும
தாமவர் தன்மை யுணரா தார் தமமுணரா
ஏதிலரை நோவ தெவன்.

இ-ள். கற்றன - கற்பநூற்பொருள்களே, கல்லார் - மூடருடைய, செவி-காதில், மாட்டி - வலியசசொல்லி, கைஉறும-அதனுல் உண்டாகும, (அவமானந்தக்குக் காரணமாகிய) குற்றம - பிழையானது, தமதே - தம்முடையதே, பிறிது அன்று-வேறன்று, (அதாவது அவருடைய நல்ல ஆதலால்)முற்றும உணர்ந்தும-முழுவதுந் தெரிந்திருந்தும,அவர் தன்மை - அமமூடருடைய தன்மையை, உணராதார் - அறிந்துகொள்ளாததாம், தம் உணராத- தயமை அறியாத, ஏதிலரை-அயலாரை, நோவது - வெறுததுக்கொள்ளல், எவன் -என்ன காரணம். (23)

மாட்டி - என்னும் சொல்லால் மூடர். கேட்பதற்கு இணங்காமையும், கற்றோர் அவரை வழிப்படுத்துவதும் தோன்றுகின்றன. தமது-இடமடியாகப்பிறந்த குறிப்புவினைமுற்று; தாம்-பகுதி, அ-சாரியை, து -ஒன்றன்படர்க்கைவிகுதி, பகுதிக்குறுக்கம், குறுக்கல்விகாரம் ; தம்மிடத்தனென ஏழாவதற்குரிய இடப்பொருள். ஏ-பிரி நிலை. பிறிது-இடைச்சொலடியாகப்பிறந்தகுறிப்புமுற்று, பிற-பகுதி, இ-சாரியை, து - ஒன்றன்படர்க்கைவிகுதி,பகுதியீற்று அகரக்கேடுகடைச்குறை.

வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்
காத்தது கொண்டாங் குவப்பெய்தார்-மாத்தகைய
அந்தப் புரத்தது பூஞை புறங்கடைய
கந்துகொல் பூட்கைக் களிறு.

இ-ள். மிகல்மக்கள் - மேலோர், வேந்துஅவை - இராச சபையை, காவார் - காத்துக்கொண்டிரார (ஆயினும் சிறப்ப டைவர்) வேறுசிலர்-(அவரின்)வேறாகியசிலோர்,காத்ததுகொ ண்டு - (அச்சபையை) காத்திருந்ததனால்கிடைத்த பொருளா ல், உவப்பு - மகிழ்ச்சியை, எய்தார் - அடையார், புனை - பூ னையானது, மாத்தகைய - பெருந்தகுதியையுடைய, அந்தப் புரத்தது - அந்தப்புரத்திலுள்ளதாயினுமசிறப்படையாது, கந்து - கட்டுத் தறியை, கொல் - முறிக்கின்ற, பூட்கை - வலி மையுடைய, களிறு-யானை, புறங்கடைய- தலைவாயலிலிருப் பினும்சிறப்படையும். (24)

ஆங்கு அசை. வேந்து- தொடைநோக்கிவந்த வலித்தல் விகாரம். தகைய-பண்படியாகப்பிறந்தகுறிப்புப்பெயரொச்சம். தகு-பகுதி, ஐ - தொழிற்பெயர் விகுதி, உகரக்கேடு சந்தியால் வந்தவிகாரம். இவ்வாறு முடிந்துநின்ற தகை-பகுதி, ய்-சந்தி, அ-பெயரொச்சவிகுதி; தொழிலும் பண்பினு ளடங்குமாதலால் பண்படியாகப்பிறந்ததென்றோம்.

குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயு மறவோர்க்
கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூ ணிறை.

இ - ள். குலமகட்கு - குலதர்மத்தையுடைய பெண்ணுக்கு, தெய்வம் - தெய்வம, கொழுநனே - தன்கணவனே, புதல்வ ர்க்கு - புத்திரர்களுக்குத் தெய்வம், தந்தையும தாயும் மன்ற- தந்தையும் தாயுமே, அறவோர்க்கு, (பிரமசாரியமுதலிய) தரு மநிலையில் நின்றவர்கரு, தெய்வம, தெய்வம, அடிகளே -கு, ருவே, அனைவோர்க்கும்-எல்லாருக்கும, தெய்வம - தெய்வம, இலைமுகம் - வெற்றிலையினது முகமபோலத்தொழில் செய் யப்பட்ட, பைமபூண் - பசுமபொன் அணி அணிந்த, இறை- அரசனேயாம. (25)

ஏகாரங்கள்தேற்றம்.மன்ற-இந்தேற்றப்பொருள்தரும் இடைச்சொல்.மகள்,மக-பகுதி, ள்-விகுதி ;அள்விகுதி எனக்கொள்ளுகையில், பகுதியீற்று அகரங்கெடலால் கடைக்குறை விகாரமெனவும், விகுதிமுதல் அகரங்கெட்டதென்றால்,முதற்குறைவிகாரமெனவும்சொல்லுக.கொழுநன்-பண்படியாகப்பிறந்தபெயர் ; கொழு-பகுதி,ந்-இடைநிலை,அன்-விகுதி; கொழு-பற்றுக்கோடு, அது-இலக்கணையாக .ஆதரவை யுணர்த்தி நின்றதாதலால்'பண்படியாகப்பிறந்ததென்க. தந்தை பொருளடியாகப்பிறந்தபெயர், தாம்-பகுதி, தை-ஆண்பால் முறைப்பொருள்தரும்விகுதி, பகுதிமுதல் குறுகியது குறுக்கல், மகரம்நகரமானது சந்தியால், பகுதி ஒருமையில் பன்மைவந்தவழுவமைதி; த்-எழுத்துப்பேறு, ஐ- விகுதிஎனினும்பொருந்தும். அறவோர் என்பதின் அகரம் ஒகரமானது நன் - சு - சூ - ககசு - இல் ஆகலும் என்ற ஆக்கஉம்மையால் கொள்க.

> கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி
> புண்ணியத்தின் பாலதே யாயினும - தண்ணளியான்
> மன்பதை யோம்பாதார்க் கென்னும் வயப்படைமற்
> றென்பயக்கு மாணல் லவர்க்கு.

இ-ள். கண்ணின்-கண்ணால், சொல்லி-(தமதெண்ணத்தைத் தெரிவித்து, செவியின் - காதினால், நோக்கும்-பிறர் செய்கையை அறிந்துகொள்ளும, இறைமாட்சி-அரசச்செல்வம், புண்ணியத்தின் -(முன்செய்த)நல்வினையினது, பாலதே ஆயினும்-வகையையேயுடையதாலும், தண அளியால்-,தண்மையாகியகிருபையால், மன்பதை - மனிதர்களை, ஓம்பாதார்க்கு- பாதுகாவாத அரசர்களுக்கு, என் ஆம் - (அவ்வரசச்செல்வம்) என்னபயனுள்ளதாகும், (ஒருபயனையுந்தராது) வயம்-வெற்றியைத்தரத்தகுந்த, படை - .ஆயுதம், ஆண்அல்லவர்க்கு - பேடிகளுக்கு, என்பயக்கும் - என்னபயனைத்தரும். (26)

இலக்கணவழியால் வாயினது வினையாகிய சொல்லி- என்பதைக் கண்ணின் மேலேற்றியும், கண்ணினது வினையாகிய நோக்குமென்பதைக்காதின்மேலேற்றியுங்கூறியது அரசச்செல்வத்தினது பெருமைதோன்றற்கு.

குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்று
மடிகொன்று பால்கொளலு மாண்பே- குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.

இ-ள். குடி - குடிகளை, கொன்று - வருத்தி, இறை - வரியை, கொள்ளும்-வாங்குகின்ற, கோமகற்கு, அரசனுக்கு, கன்று ஆ-கன்றையுடையபசுவினது,மடி-மடியை,கொன்று-அறுத்து, பால் - பாலை, கொள்ளலும் - பெறுதலும் - மாண்பே- நற்செய்கையே,குடி-குடிகளை,ஓம்பி - பாதுகாத்து, கொள்ளுமாறு-(வரி)வாங்கும் வழியில், கொள்வோர்க்கு-வாங்கும் அரசர்க்கு,மாநிதியம - பெருந்திரவியம்,வெள்ளத்தினும- வெள்ளமென்னும எண்ணினும், மேல்பல - அதிகமாகப்பலஇருத்தலை, காண்டுமே - கண்டோமே. (27)

இதையறியாது அவன்குடிகளைவருத்துவதென்னஎன்பது குறிப்பெச்சம.இருந்தல் சொல்லெச்சம.ஏ-இரண்டனுள் முன்னது பிரிநிலை; பின்னது,குடிகளை வருத்தாமல் முறையாகவரி வாங்குகிறவர்களுக்குப் பெருந்திரவியம் உண்டாயிருத்தலை அறியாமல்குடிகளை வருத்துவதைக்குறித்த இரக்கப்பொருளைத் தருகிறது. உம்மைகளில்முன்னுள்ளதுஇறந்தது தழீஇயது பின்னுள்ளதுஉயர்வுசிறப்பு.கோமகன்கோளரியமகனென்பது பொருளாதலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர்.இறை-தொழிலடியாகப்பிறந்தபெயர் ;இறுபகுதி,(கட்டு)ஐ-செயப்படுபொருள்தரும் விகுதி, உகரக்கேடுசந்தியால், மடி-இதுவும அப்பெயர்போல்வது ; மடு-பகுதி,(உண்) இ- செயப்படுபொருள்தரும்விகுதி, உகரக்கேடுசந்தியால்வந்தது.

இ-ள். முடிப்ப - முடிப்பதற்குரிய மலர்களை, முடித்து-முடித்துக்கொண்டும், பின் - பின்பு, பூசுவ - பூசுதற்குரிய சுகந்தவஸ்துக்களை, பூசி-பூசிக்கொண்டும், உடுப்ப-உடுத்தற்குரிய ஆடைகளை, உடுத்து - உடுத்துக்கொண்டும், உண்ப-உண்பதற்குரியஉணவுகளை, உண்ணு - உண்டும், இடித்திடித்து - பலமுறைநெருங்கி, கட்டுரை - உறுதிமொழிகளை, கூறின் - சொன்னால், செவிகொள்ளா - காதிற்கொள்ளா, கண்விழியா - (எதிரில் நிற்பவர்களை) கண்கள் திறந்துபாரா, (ஆதலால் அவை) நெட்டுயிர்ப்போடு - பெருமூச்சையுடையனவாய், உற்ற - கெடாமலுள்ள, பிணம் - பிணங்களாம். (29)

முடிப்ப, பூசுவ, உடுப்ப, உண்ப, என்பவை வினைமுதல் வினையைச்செய ப்படுபொருளின்மேலேற்றிச் சொல்லியவினையாலணையும்பெயர்கள். உண்ணு, செய்யாஎன்னும் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம். கட்டுரை-நெட்டுயிர்ப்புப்போன்ற பண்புத்தொகைநிலைத்தொடர். கொளா, விழியா, பலவின்பாற்கை எதிர்மறைவினைமுற்றுகள்.

ஒற்றிற் றெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றோ றுணையாத் தெரிதந்தும - குற்றம்
அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று.

இ-ள். ஒற்றின்-வேவுகாரனால், தெரியா-(உண்மைகள்)-அறியப்படா,[ஆதலால்]சிறைப்புறத்து - ஒதுக்கிடத்திலிருந்து, ஓர்துமென - அறிவோமென்று, பொன்றோள் - தனது அழகியதோளே, துணைஆக-துணையாகப்போய், தெரிதந்தும்-தெரிந்துகொண்டும், குற்றம் - (ஒருவரிடத்துள்ள) குற்றங்களை, அறிவு அரிது என்று - அறிதல் அருமை யுடையதென்று, அஞ்சுவதே - பயப்படுவதே, செங்கோன்மை - அரசநீதியாம், சென்று - (ஒருவன்) போய், முறையிடினும் - குறைகளைச்

சொல்லிக்கொண்டாலும், கேளாமை அன்று - காதுகொடாமை அரசநீதியல்ல. (30)

பொற்றோள் துணையாக என்றமையால்,பிறரறியாமல்அரசன்தான் தனித்துச்செல்லவேண்டுமென்பது பெறப்பட்டது.ஒற்று,தொழிலாகுபெயர். நெரியா என்னும் வினைக்கு உண்மைகள் என்னும் எழுவாய்வருவிக்கப்பட்டது. சிறை-என்பதற்கு மதிலெனச்சொல்லினும் பொருந்தும்; அது வழக்குக்குவருவோருடையவீட்டுமதில். துணையாக என்பதில்ஈறுதொகுத்தது.தெரிதந்து-இறந்தகாலவினையெச்சம்;தெரி என்னும்முதனிலையோடு தா-என்னும்முதனிலை புணர்ந்து இரண்டும் ஒருசொல்லின் தன்மைப்பட்டுநின்ற தெரிதா-பகுதி, த் - சந்தி, த் - இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி, பகுதி, ஆ-அவ்வானது குறுக்கலும்,சந்தித்தகரம் நகரமானதுமெலிந்தலுமாகியவிகாரம்.தா-என்னுமமுதனிலை செய்தந்துஅயர்தந்து என வேறு முதனிலைகளோடும வரும். உமமைகளிரண்டும உயர்வு சிறப்பு. ஏ பிரிநிலை.

ஏதிலார் யாதும் புகல யிறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு-நேர்நின்று
காக்கை வெளிதென்பா ரென்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு.

இ-ள். நேர்நின்று - எதிரில் நின்று, காக்கை - காகம், வெளிது-வெண்மை யுடையது, என்பார்-என்றுசாதிப்பவர், என்சொலார் -வேறெதைச்சொல்லார், தாய்க்கொலை-தாயினது கொலை, சால்பு உடைத்து - தகுதியையுடையது, என்பாரும்- என்றுசொல்வாரும், உண்டு (சிலர்) உளர், [ஆதலால்] ஏதிலார் - அந்நியர், யாதும்- மெய்யையே அல்லாமல் பொய்யையும், புகல - சொல்ல, இறைமகன் - அரசன், கோது- பொய்யாகியகுற்றத்தை, ஒரீஇ - நீக்கி, கொள்கை - (உண்மையை) அறிந்துகொள்ளல், முதுக்குறைவு - பேரறிவாம். (31)

பின்னிரண்டடியிலுள்ள இரண்டுமுடிபும் கோதொரீஇக் கொள்கைக்கு,ஏதுவாக்கியங்களாதலால் கொள்கை-எழுவாய் முதுக்குறைவு - பயனிலே. யாதுமென்னும்உம்மை முற்றுப் பொருளோடு இழிவு சிறப்பில் வந்தது. என்பாருமென்னுமும் மை-இறந்தது தழீஇயஎச்சவும்மை. ஒரீஇ - இறந்தகாலவினை யெச்சம் ; ஒரு-பகுதி, உகரத்தின் திரிபாகிய இகரம் விகுதி,இ கரம் ஈகாரமாய் அளபெடுத்தது நீட்டல்விகாரம்,உகரக்கேடு சந்தியால்வந்தவிகாரம் ; இவ்வளபெடை சொல்லிசையளபெடை.

கண்கூடாப் பட்டது கேடெனினுங் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகும் - மண்டெரி
தான்வாய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
பேரா பெருமூச் செறிந்து.

இ-ள். மண்டு எரி-மிகுந்த தீயானது, வாய்மடுப்பினும்-தன்னைச் சூழ்ந்தெரியினும், மாசுணம்-பெரும்பாம்புகள், பெருமூச்சு எறிந்து - பெருமூச்சு விட்டுக்கொண்டு, கண்துயில்வ-நித்திரை செய்வனவேயன்றி, பேரா-(தூங்கும்இடம்விட்டு) நீங்காவாம். (அதுபோல) கேடு-கெடுதி,கண்கூடாபட்டது எனினும் கண்ணுக்குத்தோன்றுவதாயினும், கீழ்மக்கட்கு - கீழ்மக்களுக்கு, உணர்ச்சி - (அக்கேட்டில் நின்றும்நீங்கத்தக்க) அறிவு, உண்டோ - உண்டாகுமோ, மற்று இல்ஆகும்-இல்லையாகும். (32)

கூடு என்னும் முதனிலேயோடு ஆ என்னும்முதனிலேகூடி இரண்டும் ஒரு சொல்லின் தன்மைப்பட்டுநின்ற கூடா-பகுதி, கேடுமுதனிலேதிரிந்த தொழிற்பெயர். இது தன் காரணமாகி யதுன்பத்துக்கு ஆதலால் காரியவாகுபெயர். இவ்வாறன்றிக்கேட்டைத்தருவதென்னும்பொருளில்தொழிலடியாகப்பிறந்தபெயரெனக்கொண்டு, கேடு-பகுதி, வினைமுதற் பொருளையு

ணர்த்தும் விகுதியாகிய இ-புணர்ந்துகெட்டு,கெட்டமாத்திரத்தில் பகுதி எகரம் ஏகாரமாயின தெனினும் பொருந்தும.

நட்புப் பிரித்தல் பகைநட்ட லொற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையு மையுறுதல் - தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி.

இ-ள். நட்பு - நட்பினரை, பிரித்தல் - பகையாக்கலும், பகை- பகைவரை, நட்டல் - சிநேகித்தலும், ஒற்று - வேவுகாரரை, இகழ்தல்-அவமதித்தலும், பக்கத்தார் யாரையும்- பக்கத்திலுள்ளோர் எல்லாரிடத்தும், ஐயுறுதல்-சந்தேகித்தலும், தக்கார்- பெரியோருடைய, நெடுமொழி-உறுதிச்சொற்களை, கோறல்-கடந்து நடத்தலும், குணம் - (முன்னிருந்த) தன்மை, பிறிது ஆதல்-வேறு படுதலும், [ஆகிய இவைகளெல்லாம்]கெடுவது - வரவேண்டுவதாகிய கேட்டை, காட்டும் - முன்னேகாட்டுகின்ற, குறி-குறிகளாம். (33)

இச்செயல்கள் ஓரரசனிடத்துண்டாயின் அவன் கெடுவானென்பது கருத்து. பிரி - பிரிதல், பிரித்தல்எனவும், கெடு - கெடுவது, கெடுப்பது எனவும் வருதலால் தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவானபகுதிகள். நட்பு - காரியவாகு பெயர், தொழிலாகுபெயருமாம. காமுறுதலென்பது போல ஒரு சொல்லின் தன்மைபட்டு நின்ற ஐயுறுதல் தொழிற்பெயர் ; ஐயம் உறு-என்னும் முதனிலைப்புணர்ச்சியில் அம்கெட்டு கடைக்குறையாய்ப்புணர்ந்த ஐயுறு-பகுதி, தல்-தொழிற்பெயர் விகுதி. நட்டல் - தொழிற்பெயர், நள்- பகுதி, தல்_ தொழிற்பெயர் விகுதி, ளகர தகரங்கள் டகரமானது சந்தியால்வந்தவிகாரம்-தக்கார்இறந்தகாலவினையாலணையும்பெயர்.தகு என்னும்முதனிலை இரட்டியதே இறந்தகாலங்காட்டியது.

கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா - வண்மை

பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
சலியாத கற்ப தரு.

இ-ள். கண்ணோக்கு ஏ - கண்ணினது குளிர்ந்தபார்வையே, அரும்பு ஆக-அரும்பாகவும், நகைமுகமே-இனிய முகமே, நாள்மலர் ஆக- புதுமலராகவும், வாய்மையின் இன்மொழியே - உண்மையாகிய இன்சொல்லே, தீம்காய் ஆக-மதுரமானகாயாகவும், வண்மை ஏ - கொடையே, பலம் ஆக- பழமாகவும், நலம்கனிந்த - இந்நன்மைகள்மிகுந்த, பண்புஉடையார் அன்றே - தன்மையுடையார்களே, சலியாத -(கொடுப்பதில்) சலித்தலில்லாத, கற்பதரு- கற்பகதரு ஆவர். (34)

நோக்கென்பதன் கடைசியிலும், வண்மை என்பதன்கடைசியிலும் தேற்றேகாரம்தொகுத்தல்பெற்றது. ஆம்என்னும் வினையெச்சங்களினீறும் தொகுத்தல் பெற்றது. அன்றே - தெளிவுப்பொருளில் வந்தது. கற்பகமென்பது கற்பமெனவும்ஆரியத்தில்வழங்கும். நோக்குமுதனிலைத்தொழிற்பெயர். தம்மிடத்துவரும்யாசகர் தூரத்திலேயேதிரும்பிப்போகாதபடி பார்க்குங் குளிர்ந்தபார்வையை அரும்பாகவும், நெருங்கும்படிக் காட்டுகின்ற முகமலர்ச்சியை மலராகவும், நெருங்கியபின் யாதுவேண்டுமென வினவுகின்ற உண்மையாகிய இன்சொல்லைத்தீங்காயாகவும், பின்கொடுக்கும் கொடையைப் பழமாகவும், கொடுப்பவரைக் கற்பகத்தருவாகவும் உருவுகப்படுத்தினர்

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறோ துயருறா - ஆங்கதுகொண்
டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று.

இ-ள். வாங்கும் -தாம்வாங்கிக்கொள்ளும், கவளத்து-கவளத்தில், ஒருசிறிது-மிகச்சிறிதரிசி, வாய்-வாயிலிருந்து, தப்பின்-

தவறிச்சிந்தினால், தூங்கும் - அசையு மியல்புள்ள, களிறு-யானைகளோ, துயர்உறு-துன்பமடையா, ஆங்கு-சிந்திய இடத்தில், அதுகொண்டு-சிந்திய அரிசியைப்பெற்று, ஊரும்- தவழ்கின்ற, ஒருகோடிஎறும்பு- பல எறும்புகள், இங்கு-இப்பூமியில், ஆரும் - நிரம்புகின்ற, கிளையோடு- சுற்றத்தோடு கூடி, அயின்று - உண்டு, உய்யும் - சீவித்திருக்கும். (35)

தமராளுகைக்குளடங்கிய அரசரும், குடிகளும்,கட்டுகின்ற வரிப்பணமாகிய தமதுசெல்வப்பொருளில், சிறிது இழந்துவிட்டால் அதைக்குறித்துப் பேரரசர்கள் துன்பப்படமாட்டார்; பொருளுக்காசமுயல்கின்ற எளியர் பலர் அவ்விழந்த பொருளைப்பெற்றுத் தமது குடும்பத்தோடுசீவனஞ்செய்வா.ஒ-உயர்வுசிறப்பு.ஒரு கோடி-என்பது பன்மையைக்காட்டவந்ததோர்குறிப்புச்சொல். கிளை என்னும் முதனிலைத்தொழிற்பெயர், கொம்புக்கானது தொழிலாகுபெயர்; அது கிளைபோன்ற சுற்றத்துக்கானது உவமையாகுபெயர்.

மாகஞ் சிறுகக் குவிந்து நிதிக்குவை
ஈகையி னெக்கழுத்த மிக்குடைய-மாகொல்
பகைமுகந்த வொள்வேலான் பார்வையிற் றீட்டும்
நகைமுகத்த நன்கு மதிப்பு.

இ-ள். மாகம்-பெரிய ஆகாயமானது, சிறுக-சிறிதென்னும்படி, நிதிக்குவை-திரவியராசியை, குவித்து-குவியல்செய்து, ஈகையின்-கொடுப்பதினும், மா கொல் - யானையைக்கொல்லுகின்ற, பகை-பகைத்தன்மையை, முகந்த-தன்னிடத்துள்ள, ஒள்வேலான் - ஒளிபொருந்தியவேலையுடைய அரசனது,பார்வையின் - பார்வையால், தீட்டும் - எழுதப்படுகின்ற, நகைமுகத்த - மலர்ந்தமுகத்திலுள்ள, நன்குமதிப்பு - உயர்வாகமதித்தல்கள், எக்கழுத்தம் - தலையெடுப்பை, மிக்கு உடைய - மிகுதியும் உடையனவாம். (36)

மிகுந்தபொருளினும் நன்குமதிப்பே ஒருவனுக்குச்சிறந்த தென்பதுகருத்து. சிறுக - சிறுகு என்னுமவினையடியாகப்பிற ந்த செயவெனெச்சம், காரியப் பொருளதுஆதலால் எதிர்கால த்தில்வந்தது. நிதிக்குவை - ஒன்றன்கூட்டத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறுபவேற்றுமைத்தொகைநிலைத்தொடர். அ ட்டென்பதுபோல மிக்கு முதநிலைதிரிந்தொழிற்பெயர்; இது இறந்தகால வினையெச்சமல்ல. முசர்ந்த இரண்டும்குறிப்புப்பெ யரெச்சம்; முன்னது வினையடியாகப் பிறந்தது; பின்னது இ டமடியாகப்பிறந்தது. பார்வை தொழிற்பெயர்.

> களைகணாந் தம்மடைந்தார்க் குற்றுழியு மற்றோர்
> வினைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்-தளர்நடைய
> தானுடம பென்று புகழுடம் போமபுதற்கே
> தானுடன் பட்டார்க டாம.

இ-ள். ஊன்-இறைச்சியாலாகிய, உடம்பு-தேகம், தளர்-(பி ன்பு)தளர்கின்ற, நடையதுஎன்று - தன்மையுடையதென்று, புகழ்உடம்பு - (அவ்வாறு) தளராத புகழாகியஉடம்பை, [அ டைந்து]ஓம்புதற்கே - பாதுகாப்பதற்கே, உடன்பட்டார்கள்- பாத்தியப்பட்டவர்கள், களைகண் ஆக-ஆதரவாக எண்ணி, தம் அடைந்தார்க்கு-தம்மைஅடைந்தவருக்கு, உற்றுழியும் - (சிறி து)துன்பம்வந்தவிடத்தும், மற்றுஓர்வினைவு - வேறொருபயனை உன்னி-நினைத்து, வெறு உடம்பு-பயனில்லாத உடம்பை, தாங் கார்-தாங்கிஉயிர்வாழார். (37)

தம்முடலைத் துறந்தாவது காப்பாரென்பது குறிப்பாக கொள்ளப்பட்டது. மற்றோர்வினைவென்றது, குடும்பப்பாதுகா ப்பு, உலகவின்ப மநுபவித்தல் முதலியவற்றையாம். ஆக என்பது ஆ-என ஈறுதொகுத்தலாய்நின்றது. உற்றுழி, இறந்த காலவினையெச்சம்; உறு-பகுதி, உழி, இறந்தகாலவினையெச்ச விகுதி, பகுதிஒற்றிரட்டல் விரித்தல், உகரக்கேடு சந்தியால்வ ந்தவிகாரம். உம்மை - உயர்வுசிறப்பு.

தம்முடைய யாற்றலு மானமுந் தோற்றுத்தம்
இன்னுயி ரோம்பினு மோம்புக-பின்னர்ச்
சிறுவரை யாயினு மன்ற தமக்காங்
கிறுவரை யில்லை யெனின்.

இ-ள். தம்முடைய-தம்முடைய, ஆற்றலும்-வலியையும், மானமும்-மானத்தையும், தோற்று-இழந்து, தம்-தம்முடைய, இன் உயிர் - இனிமையாகியஉயிரை, ஓம்பினும் - பாதுகாப்பாராயினும், ஓம்புக - காக்கக்கடவர்கள், பின்னர் - அப்படிக்காத்தபின், சிறுவரை ஆயினும் - கணப்பொழுதாயினும், தமக்கு-(இழிதொழில்செய்துசீவிக்கும்) தமக்கு, ஆங்கு-காத்தலினால் இறுவரை-முடியும்எல்லை, (அதாவதுசாங்காலம்) மன்ற இல்லை எனின்-நிச்சயமாக இல்லையானால். (38)

இறத்தல் நிச்சயமாயிருத்தலால் வலியும், மானமுங்கெடாமல் ஜீவிக்கவேண்டுமென்பதுகருத்து. இப்படி உயிர்வாழ விரும்புதல் உயிர்விடுந்துணிவில்லாமையாலாகையால் அவருயிர் இன்னுயிரெனப்பட்டது. ஓம்பினும் என்றஉம்மை, ஓம்புதல் கூடாதென்னும்பொருள்தரலால் எதிர்மறைஉம்மை. சிறுவரையாயினும், என்றஉம்மை இழிவுசிறப்பும்மை. சிறுவரை-சிற்றளவையுடைய காலத்தை உணர்த்தலால் பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகையாகிய காரணப்பெயர்.

கலனழிந்த கற்புடைப் பெண்டிரு மைந்து
புலனொருங்கப் பொய்யொழிந் தாரும்-கொலைஞாட்பில்
மொய்ம்புடை வீரரு மஞ்சார் முரண்மறலி
தும்பை முடிசூ டினும்.

இ-ள். கலன் அழிந்த-மங்கலநாண்இழந்த, கற்புஉடைய- கற்பையுடைய, பெண்டிரும் - குலப்பெண்களும், ஐந்துபுலன்-ஐம்புலன், ஒருங்க-கெட, பொய்-நிலையில்லாததாகியஉலகஇன்

பத்தை, ஒழிந்தாரும்-விட்டோரும், கொலை- கொல்லுந்தொழிலையுடைய, ஞாட்பில்-போரில், மொய்ம்புஉடைய - (கலங்காமையாகிய)வலியையுடைய,வீரரும்-வீரர்களும்,முரண்மறலி-வலியையுடைய நமன், தும்பை - தும்பைப்பூமாலையை, முடிசூடினும் - முடியில் சூடிக்கொண்டாலும், அஞ்சார் - கலங்கார். (39)

இம்மூவரும் உயிரின்மேல்விருப்பமில்லாராதலால்மரணத்துக்கு அஞ்சாரென்ப துகருத்து. தும்பைமலர்மாலை சூடுதல் போர்க்குச்செல்வோர் செயலாதலால் தும்பைமுடி சூடினும் என்பதற்கு உயிரைவாங்கும்படிவந்தாலுமென்பது பொருள். கலன் தலைமைபற்றி மங்கலநாணுக்காயிற்று. தும்பை-முதலாகுபெயர். வீரர்-பண்படியாகப்பிறந்தபெயர் ; வீரம்-பகுதி, அர் - பலர்பாற்படர்க்கை விகுதி, பகுதியீற்று அம்முக்கேடு கடைக்குறை, மகரக்கேடு சந்தியால்வந்தவிகாரம் ; ர் - விகுதி எனினும்பொருந்தும்.

புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறும்
கழிமுடை நாற்றத்த வேனும் - விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோடுதற்கு.

இ-ள். விழலர்-(பிறப்பின்) பயனில்லார்,புழுநெளிந்து-(தம்முடம்புகள்) புழுக்கள் நெளியும்படி, புண்அழுகி- புண்கள்அழுகி, யோசனை- யோசனைதூரம், நாறும்-நாறுகின்ற,கழி-மிகுந்த, முடைநாற்றத்தஏனும் - துர்க்கந்தத்தை யுடையன ஆயினும், விளிவு-சாதலை, உன்னி - நினைத்து, வெய்துஉயிர்ப்பர் - பெருமூச்சுவிடுவார், மெய்ப்பயன்-உடம்பாலாகிய அறப்பயனை, கொண்டார் - பெற்றபெரியோர், சுமை. (உடம்பாகிய) சுமையை, போடுதற்கு-போட்டுவிடுதற்கு, சுளியார்-வெறுக்கார். (40)

விழல்-பசுமுதலிய விலங்குகளுக்கும் பயன்படாத புல். இது தொழிலாகுபெயர். விழலர் அப்புல்லைப்போன்றவர், அதாவது பயனற்றவரென்பது. நெளிந்து, நெளியஎன்பதன் திரிபு. யோசனை-பத்துநாழிகையளவைக் கொண்டதூரம் ; இதுநெடுந்தூரமென்பதை யுணர்ந்தற்குக்காட்டியதோரளவைப் பெயர். நாற்றம், பொதுப்பெயராதலால் முடைநாற்றம் இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். நாற்றத்த-தொழிலடியாகப்பிறந்த பலவின்படர்க்கைக்குறிப்பு வினைமுற்று ; நாற்றம்-பகுதி, அத்து-சாரியை, அ-பலவின்படர்க்கை விகுதி, மகரமும், சாரியைமுதல்அகரமும், ஈற்றுகரமும், கெட்டதுசந்தியால்வந்தவிகாரம்.

> இகழி னிகழ்ந்தாங் கிறைமக னொன்று
> புகழினு மொக்கப் புகழ்ப - இகன்மன்னன்
> சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செய்யும்
> நீர்வழிப் பட்ட புணை.

இ-ள். இறைமகன் - அரசன், ஒன்று இகழின் - ஒருபொருளை இகழ்வானாயின், இகழ்ந்து-(தாமும்கூட)இகழ்ந்து, ஆங்கு-அவ்விகழ்ந்த காலத்திலேயே, ஒன்று -அவ்வொருபொருளை, புகழினும் - புகழ்ந்தாலும், ஒக்க - அவனோடுகூட, புகழ்ப-(உலகத்தார்) புகழ்வார்கள், நீர்வழி-நீரோடுசிறவழியில், பட்ட-உள்ள, புணை-தெப்பம, மற்று என்செய்யும்-(அவ்வழியே செல்லாமல்) வேறென்னசெய்யும் (அதுபோல) மன்பதை-மக்கட்கூட்டம், இகல்-வல்லமையையுடைய, மன்னன்-அரசனது, சீர்வழி-குறிப்பின்வழியில், பட்டதே - பொருந்தியதேயாம் (41

புகழினுமென்ற உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. புகழ்ப - பலர்பாற் படர்க்கை எதிர்கால வினைமுற்று; பகரவிகுதிபாலிடங்காலத்தைக் காட்டியது. மன்பதை-சொல்லளவில் அஃறிணையாதலால் பட்டதென்னும் அத்திணை

வினைகொண்டது. என் - வினைப்பெயர். புணை - புணைக்கப்பட்டதென்னும்பொருளில் புணையென்னும்பகுதியோடு ஐ-செயப்படுபொருளைக் காட்டும் விகுதி புணர்ந்துகெட்டதொழிலடியாகப்பிறந்தபெயர்.

செவிசுடச் சென்றுங் கிடித்தறிவு மூட்டி
வெகுளினும வாய்வெரீஇப் பேரா - கவிழ்மதத்த
கைம்மா வயத்ததேபாகுமற் றெத்திறத்தும்
அம்மாண் பினவே யமைச்சு.

இ-ள். அமைச்சு - மந்திரிகள், செவி - அரசனது காதில், சுட-சுடும்படி, சென்று - சமீபத்திற்போய், இடித்து-உறுதிமொழிகளைச்சொல்லி, அறிவுமூட்டி - அறிவுறுத்தலால், வெகுளினும்-(அவ்வரசன்)கோபிப்பானாயினும், ஆங்கு-அப்போது, வாய்வெரீஇ- சொல்லுதற்குஅஞ்சி, பேரா-புத்திசொல்லுதலைவிடார். [அதுஎதுபோலவெனில்]பாகு-(ஓட்டும்)பாகன், கவிழ்-பெருகுகின்ற,மதத்த-மதமுள்ள,கைம்மா-யானையினது, வயத்ததே-வசப்பட்டவனோ,எத்திறத்தும்-எவ்விதத்தினும், அம்மாண்பினவே-(மந்திரிகளும) அத்தன்மையரோ ஆவர். (42)

அமைச்சு, சொல்லாலஃறிணையைப்போல பால்பா அஃறிணைப் பெயராயிருத்தலால் பேராஎன்னும் பலவின்படர்க்கை வினைகொண்டது. பாகு, என்பது அஃறிணைச்சொல்லாயிருத்தலால் அத்திணைவினைகொண்டது. இவ்விருபெயரும் பண்பாகுபெயர்கள். முன்னுள்ளஉம்மை உயர்வுசிறப்பு. பின்னுள்ளஉம்மை முற்று. ஏ - இரண்டில் முன்னுள்ளது எதிர்மறை. பின்னுள்ளது தேற்றம், வாய் கருவியாகுபெயர்; வெரீஇ இறந்தகாலவினையெச்சம்; பகுதி வெரு, மற்று அசை.

கைவரும் வேந்த னமக்கென்று காதலித்த
செவ்வி தெரியா துரையற்க - ஒவ்வொருகால்

எண்மைய னேனு மரியன் பெரிதம்மா
கண்ணில னுள்வெயர்ப்பி னன்.

இ-ள். வேந்தன் - அரசன், ஒவ்வொருகால் - ஒவ்வொரு காலத்தில், எண்மையன்எனும் - (ஒன்றைச்சொல்லிக்கொள்ள) எளியனாயிருந்தாலும், அம்மா-இது ஆச்சரியம், பெரிது-மிகுதியாக, (அதாவது பலகாலங்களில்) அரியன்-அரியனாயிருப்பன். [ஏனெனில்] கண்இலன் - தாட்சிணியம் இல்லான், உள்-உள்ளத்தில், வெயர்ப்பினன் - கோபமுடையான், (ஆதலால்) நமக்கு - நமக்கு, கைவரும் என்று - பழகினவனென்று, காதலித்த - விரும்பினவற்றை, செவ்வி -சமயம், தெரியாது-தெரிந்துகொள்ளாமல், உரையற்க - நீசொல்லற்க. (43)

அரசன் நமக்குப்பழகினவனென்று ஒருவன் சமயந்தெரியாமல் தனக்குவேண்டியதைச் சொல்லிக்கொண்டால், அக்காரியம் பயன்படாமற்போவதுமல்லாமல், தானும் தண்டனையடைவானென்பதுகருத்து. கைவரும் - ஒருசொல்லின்தன்மையதாகிய செய்யுமென்முற்று ; கைவா பகுதி, உம் நிகழ்காலவினைமுற்றுப்பொருள் விகுதி, ரு-விரித்தல்விகாரம், உகரக்கேடுசந்தியால், இதுபெயரெச்சம் வினைமுற்றுமாது. காதலித்த காதலென்னும் பெயரடியாகப்பிறந்த இறந்தகாலவினையாலணையும்பெயர் ; பகுதி காதலி. செவ்வி-பண்படியாகபிறந்பெயர் ; செப்-பகுதி, இ - ஒன்றன்படர்க்கைவிகுதி, மகரம் "முன்னின்றமெய்திரிதல்" என்பதனால் திரிந்த தனிக்குறில் முன்ஒற்றாகிய அவ்வகரமும், இரட்டியவகரமும் சந்தி ; செம்மையுடையதென்பதுபொருள்.

பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமை பிறிதொன்றுங் கொள்ளார் - வெகுளின்மன்
காதன்மை யுண்டே யிறைமாண்டார்க் கேதிலரும்
ஆர்வலரு மில்லை யவர்க்கு.

இ-ள். பழமை - பழயசிநேகத்தை, கடைப்பிடியார்-அரசர்கள் மறவாமலிரார், கேண்மையும்-உறவினராந்தன்மையையும், பாரார்- மதியார், கிழமைபிறிதுஒன்றும் - வேறொருபாத்தியந்தையும், கொள்ளார் - நினையார், வெகுளின்மன்- மிகுதியுங்கோபிந்தால், இறைமாண்டார்க்கு-அரசில் மாட்சிமைப்பட்டவர்க்கு,காதன்மை-( ஒருவர்மேல்)அன்புடைமை, உண்டே-உண்டோ,அவர்க்கு - அவ்வரசர்க்கு, ஏதிலரும் - அயலாரும், ஆர்வலரும்- சிநேகரும், இல்லை-இல்லை. (44)

மேற்செய்யுளில் உள்வெயர்ப்பினுனென்றூர்;அவ்வுள்வெயர்ப்பின் காரியத்தைஇச்செய்யுளிற்சொல்லிறூர். கடைப்பிடியார்-பலர்பாற்படர்க்கைஎதிர்மறைவினைமுற்று; இதுஒருசொல்லின்தன்மையது. கடைப்பிடி-பகுதி, கேண்மை - பண்புப்பெயர்,கேள்-(உறவு)பகுதி,மை-பகுதிப்பொருள்விகுதி,ளகரந்திரிந்த ணகரம் சந்தி, கேண்மையுமென்றவும்மை இறந்ததுதழீஇயஎச்சவும்மை. மன்- மிகுதிப்பொருளதாகிய இடைச்சொல்.

> மன்னர் புறங்கடை காத்து வறிதேயாம்
> என்னலங் காண்டுமென் றெள்ளற்க - பன்னெடுநாள்
> காத்தவை யெல்லாங்கடைமுறைபோய்க் கைகொடுத்து
> வேத்தவையின் மிக்குச் செயும்.

இ-ள். யாம்-நாம், மன்னர்-அரசருடைய, புறங்கடை-தலைவாயிலை, காத்து - காத்திருந்து, வறிதே (அது) பயனிலதே, என்நலம்-என்ன நன்மையை, காண்டுமென்று - கண்டோமென்று, எள்ளற்க-இகழாதிருக்கக்கடவர்,பல்நெடுநாள்-பலநாள், காத்தவைஎல்லாம் - காத்திருந்தவைஎல்லாம், கடைமுறைபோய்- முடிவிறசென்று, கைகொடுத்து - உதவி, வேந்து அவையில் - இராஜசபையில், மிகுகு - பெருமையை, செய்யும்-செய்துவிடும், (45)

வறிது என்னும்பண்படியாகப்பிறந்த குறிப்புவினைமுற்றுக்குஎழுவாய் காத்தற்றொழிலாதலால் அது என்னுஞ்சுட்டுப்பெயர் வருவிக்கப்பட்டது. ஏ - தேற்றம். கைகொடுத்து, ஒருசொல்லின் தன்மைப்பட்டுநின்ற இறந்தகாலவினையெச்சம், பகுதி கைகொடு, த் - சந்தி, த்-இறந்தகாலஇடைநிலை, உ-வினையெச்ச விகுதி.

உறுதி பயப்ப கடைபோகா வேனும்
இறுவரை காறு முயல்ப - இறுமுயிர்க்கும்
ஆயுண் மருந்தொழுக்க றீதன்றா லல்லனபோல்
ஆவனவு முண்டு சில.

இ-ள். இறும் உயிர்க்கும் - சாகும்நிலையிலிருக்கும் உயிருக்கும், ஆயுள்மருந்து - பிழைக்கும் மருந்தை, ஒழுக்கல் - வாயில்விடுதல், தீது அன்று - நலந்தருவதாகும் [அதுபோல] சில-சில கருமங்கள், அல்லனபோல்-முடியாதனபோலக்காணப்பட்டு, ஆவனவும் உண்டு - (பின்) முடிவனவுமுண்டு [ஆதலால்] உறுதி-அடைதற்குரிய நன்மையை, பயப்ப - தரத்தக்கமுயற்சிகள், கடைபோகா எனும் - முடியா விடினும், இறுவரைகாறும் - முடியும்வரையும், முயல்ப - (அறிவுடையோர்) முயற்சிசெய்வர். (46)

உறுதி-அடையப்படுவதென்னும் பொருளில் உறு-பகுதி, த்-எழுத்துப்பேறு, இ-செயப்படுபொருள்தரும்விகுதி; அன்றியும், உறு-பகுதி, தி-புடைபெயர்ச்சி விகுதி, இவ்விரண்டுறுப்பால் முடிந்ததொழிற்பெயரெனக்கொண்டு, தொழிலாகு பெயரெனினும்பொருந்தும். பயப்ப, பலவின்படர்க்கை எதிர்கால வினையாலணையும்பெயர். கடைபோகா-ஒருசொல்லின் தன்மையதாகிய பலவின்படர்க்கைஎதிர்மறைவினைமுற்று. ஆயுண்மருந்து-இரண்டாம வேற்றுமைத்தொகைநிலைத்தொடர்.

முயலாது வைத்து முயற்றின்மை யாலே
உயலாகா வூழ்த்திறந்த வென்றார் - மயலாயும்

ஊற்ற மிறுவிளக்க மூழுண்மை காண்டுமென்
றேற்றுவ ரெறிகான் முகத்து.

இ-ள். முயலாது - அறிவுடையார் முயற்சி செய்யாமல், வைத்து (கருமங்களை) வைத்து, முயற்றின்மையாலே - முயற்சி இல்லாமையாலே, ஊழ்த்திறந்த - ஊழின்வகையில் பட்ட கருமங்கள், உயல் ஆகா - தப்புதலாகா, என்னார் - என்று நினையார், ஊழ் - ஊழ்வினை, உண்மை - உண்டாயிருத்தலை, காண்டும் என்று - காணப்போமென்று, மயல் ஆயும் - மயங்கியும், ஊற்றம் - மறைவு, இறுவிளக்கம் - இல்லாத தீபத்தை, எறி - வீசுகின்ற, கால்முகத்து - காற்றெதிரில், ஏற்றுவர் - (உலகத்தார்) ஏற்றுவார்கள். (47)

முயலாது எதிர்மறை வினையெச்சம்; முயல்-பகுதி, ஆ-எதிர்மறை விகுதி, அனைத்து மொருபகுதி, த்-எழுத்துப்பேறு, உ-வினையெச்ச விகுதி. முயற்று தொழிற்பெயர்; முயல் பகுதி, து-புடைபெயர்ச்சி விகுதி, லகார தகரங்கள் றகரமானது சந்தியால். உயல்-தொழிற்பெயர்; உய்-பகுதி, அல்-புடைபெயர்ச்சி விகுதி, இவ்விகுதியோடு ஆ- என்னும் வினையடி புணர்ந்து ஒருசொல் லின்றன்மைப்பட்டு நின்ற உயலா-பகுதி, கு-சாரியை, ஆ-படர்க்கை எதிர்மறைவிகுதி, உகரக்கேடு சந்தியால்வந்தவிகாரம்.

உலையா முயற்சி களைகணா வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே-உலகறியப்
பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த
கான்முளையே போலுங் கரி.

இ-ள். உலையாத - கெடாத, முயற்சி - முயற்சியானது, களைகண் ஆக - துணையாக, ஊழின்வலி - ஊழினது வன்மையை, சிந்தும் - கெடுக்கின்ற, வன்மையும் - பலமும், உண்டே - உளதே, [அதற்கு] உலகு - உலகத்தார், அறிய - அறியும்படி, பால்முளை - ஊழின் முளையை, தின்று - கெடுத்து, மறலி - நமனுடைய,

உயிர்-உயிரை, குடித்த-வாங்கிய, கான்முளையே - பிள்ளையாகிய மார்க்கண்டேயரோ, கரி-சாக்ஷியாம. (48)

உலையாத, சளைகளைத,இரண்டும் ஈறு தொகுத்தலாய்கின்றன. தன்வினை, பிறவினைகளுக்குப் பொதுவாகிய சிதது என்னும் பெயரெச்சம் இங்குப்பிறவினையாய்நின்றது. ஏ-இரண்டும் தேற்றம். கடவுள் ஒருவன் ஒரு பிறப்பிற்செய்த வினையை ஆயிரம்பங்கு செய்து ஒருபங்கில் ஒரு காணிப்பங்குகொண்ட வினையை மறுபிறப்பில் அநுபவிக்க இடுகிருனென்பராதலால் ஊழை,பால் என்றார். பால்-பண்பாகு பெயர். உம்மை-உயர்வு சிறப்பு.கான்முளை என்பதை,கால்+முளை,எனப்பிரிக்கவும்;ஒருவனுடைய வமிசம் பெருகுதற்கு அவன் புத்திரன் வழிபோலிருத்தலால் கால்-உவமையாகுபெயர்.நமனது உயிர்குடித்த சரித்திரம்: மிருகண்டமுநிவன் புத்திரனில்லாமையால் சிவமூர்த்தியைநோக்கித்தவஞ்செய்ய, அம்மூர்த்திஅதிதோன்றி, உனக்கு ஒரு புத்திரன் உண்டாவான், அவன் பதினறுவயதுமட்டும் உயிர்பிழைத்திருப்பானென்று வரந்தந்துபோக, அப்படியே மார்க்கண்டேயர்பிறந்து, சிவநேசமமுதிர்ந்து சிவார்ச்சனைசெய்து வருகையில் பதினறு வயது எல்லையானபோது சிவார்ச்சனை செய்து கொண்டிருந்த அம்மார்க்கண்டேயர்மேல், நமன் பாசம்வீச சிவமூர்த்திக்குக்கோபமபிறந்து நமனையுதைத்தனரென்பது.

காலமறிந் தாங் கிடமறிந்து செய்வினையின்
மூலமறிந்து விளைவறிந்து - மேலுந்தாம
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும்.

இ-ள். தாம்-(அரசர்கள்)தாம், காலம்-(ஒருகருமத்தைச்செய்தற்குரிய) காலத்தை, அறிந்து - தெரிந்து, இடம்-(தகுந்த) இடத்தை, அறிந்து - தெரிந்து, செய்வினையின் - செய்தற்குரி

ய காரியத்தின், மூலம்அறிந்து - காரணத்தைத்தெரிந்து, விளைவு அறிந்து - (அக்காரியத்தால் உண்டாகும்)பயனைஅறிந்து, மேலும் - இவற்றைஅறிதல் அல்லாமலும், சூழ்வன - ஆராயப்படுவனவற்றை, சூழ்ந்து - (அறிவுடையாரோடு) ஆராய்ந்து, துணைமை - தமக்கும்பகைவர்க்கும் துணையானவர்களது, வலிதெரிந்து - பலத்தை அறிந்து,(பின்பு) ஆள்வினை - முயற்சியால், ஆளப்படும் - (அக்காரியம்) செய்யப்படும். (49)

விளைவு-தொழிலாகுபெயர் ; உம்மை-இறந்ததுதழீஇயஎச்சவும்மை; சூழ்வன-செயப்பாட்டு வினையாகிய எதிர்காலவினையாலணையும்பெயர் ; சூழ்-பகுதி,அ-சாரியை,ப்-சந்தி,படு-செயப்பாட்டு வினைப்பொருள்தரும்விகுதி, அனைத்து மொருபகுதி, ப்-எதிர்காலஇடைநிலை, அன்-சாரியை, அ-பலவின்பாற்கைவிகுதி ; இப்படி முடிந்துநின்ற பகுபதமே படு-விகுதி தொகுத்தல்பெற்றுநின்றது.

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார் - செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

இ-ள். கருமமே-(தாம் மேற்கொண்ட) காரியத்திலேயே, கணஆயினார் - எண்ணமுள்ளவர்,மெய்வருத்தம் - உடம்பின் வருத்தத்தை, பாரார்-கவனியார், பசி - பசியை, நோக்கார்-நினையார், கண்துஞ்சார் - கண்ணுறங்கார், எவர்எவர்தீமையும் - எவர்எவர்செய்யும் பொல்லாங்கையும், மேற்கொள்ளார்-பாராட்டார்,செவ்வி-தகுந்தகாலத்தினது, அருமையும் - அருமையையும், பாரார்-கவனியார்,அவமதிப்பும்-அவமானத்தையும், கொள்ளார்- (மனத்தில்) கொள்ளார். (50)

கண்துஞ்சார்-என்பதுகையொடிந்தான் என்பதுபோன்ற திணைவழுவமைதியாகிய எழுவாய்த் தொகாநிலைத்தொடர்

எவர் எவர், எவ்வெவர், எனவிகாரப்பட்டுப்புணர்ந்ததை நன்-உயிர் - சகூ - ரு - "ஒன்பதொழித்தஎண் ஒன்பதும் இரட்டின், முன்னதின்முன் அல ஓடஉயிர்வரின், வவ்வும் மெய்வரின்வந்ததும்மிகல்நெறி" என்பதில் நெறிஎன்றதனால் அமைக்கவும். தினையும்-என்பதிலுள்ள உம்மை, முற்றுப்பொருள் தருவதோடு இறந்தது தழீஇயவெச்சவும்மை. இதற்குப்பின்வருவதை நோக்கு மிடத்து எதிரதுதழீஇயதாகவும் கொள்ளலாம்.

> சிறிய பகையெனினு மோம்புக தேற்றார்
> பெரிதும் பிழைபா டுடையர் - நிறைகயத்
> தாழ்நீர் மடுவிற் றவளை குதிப்பினும்
> யானை நிழல்காண் பரிது.

இ-ள். பகை - பகைகள், சிறிய வெனினும் - சிறியன ஆயினும், ஓம்புதல் - (அவற்றை) காத்துக்கொள்ளுதலை, தேற்றார் - அறியாதவர், பிழைபாடு - குற்றமுண்டாகுதலை, பெரிதும் உடையர்-மிகுதியும் (அப்பகைகளால்) உடையராவர், நிறை-நிறைந்த, கயம்தாழ்-மிகஆழமாகிய,நீர்மடுவில்-நீரையுடையமடுவில், தவளைகுதிப்பினும்-தவளைகுதித்தாலும், யானைநிழல் - யானையினது நிழலை, காண்பது அரிது (அம்மடுவில்)காணுதல் அரிதாகும். (51)

பகை - சொல்லால் பால்பகா அஃறிணைப் பெயராயிருத்தலால் பலவின்பாலாய், சிறியஎன்னும் பலவின்பாற்க்கைக் குறிப்புவினைகொண்டது. பகைகளை ஓம்புதலாவது நெருங்காமல் முழுதும்நீங்குதல். தேற்றார் தன்வினை பிறவினைகளுக்குப்பொது ஆயினும் இங்குத் தன்வினையாய் நின்றது. தேறுஎன்னும் பகுதி தேற்றுஎன விகாரப்பட்டது;தேற்று-பகுதி, ஆ-எதிர்மறை விகுதி, உகரக்கேடு சந்தியால்வந்தவிகாரம். அனைத்துமொருபகுதி, ஆர்-பலர்பாற் படர்க்கைவிகுதி, விகுதி ஆகாரக்கேடு கடைக்குறை ; பெரிதுகுறிப்புவினையெச்சம்.

உம்மைகள் மூன்றில் நடு நின்றது உயர்வுசிறப்போடு முற்றுப் பொருளில்வந்தது. மற்ற இரண்டும் இழிவுசிறப்பு. கயத்தாழ், ஒரு பொருட்பன்மொழி.

புறப்பகை கோடியின் மிக்குறினு மஞ்சார்
அகப்பகை யொன்றஞ்சிக் காப்ப — அனைத்துலகும்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலுங் காமப் பகை.

இ-ள். அனைத்து உலகும் - எல்லாவுலகங்களையும், சொல் ஒன்றின் - ஒருசொல்லினால், யாப்பார் - தமதுவசப்படுத்துதற்குரிய முனிவர், பல் காலும்-பலதரமும், காமப்பகை - காமமாகிய உட்பகையை, பரிந்து - வருந்தி, ஓம்பிக்காப்ப - மிகுதியுங்காப்பார்கள்-(அதுபோல) புறப்பகை - வெளிப்பகைவர், கோடியின் - கோடிஎன்னுந் தொகையினும், மிக்கு-அதிகமாய், உறினும்-இருப்பினும், அஞ்சார் - (அறிவுடையார்) பயப்படார், அகப்பகை - உட்பகைவருளிய, ஒன்று - ஒருவனை, அஞ்சி - பயந்து, காப்ப - பரிகரிப்பார். (52)

புறப்பகை: பகையைக்காட்டிப் புறத்திலுள்ள பகைவர். உட்பகை பகையைப்புறத்தில்காட்டாமல் உள்ளாயிருக்கும் பகைவர். அவர் ஞாதியர், மந்திரிகள் முதலானோர். அகப்பகை, என்பதற்கு விஷயமாகிய பகை எனவுங் கொள்ளலாம், கோடி-மிகப்பலவென்பதற்குக் காட்டியதொகை. மிக்கு, இறந்தகாலவினையெச்சம் ; மிகு-பகுதி, உ-வினையெச்சவிகுதி, பகுதி ஒற்றிரட்டியதும் உகரக்கேடும், சந்தியால்வந்தவிகாரங்கள். அனைத்து, இடைச்சொலடியாகப் பிறந்த பெயர் ; அனை-பகுதி, த்-சந்தி, து- பகுதிப்பொருள் விகுதி.

புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறுதல் வேண்டுங்-கழிபெருங்

கண்ணோட்டஞ் செய்யேல் கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து.

இ-ள். புண்-புண்ணை, கருவிஇட்டு-(நோயாளர்) கத்தியாலறுத்து, ஆற்றுவார் - ஆறச்செய்வார்கள், பொதிந்து- மறைந்து, மூடிவையார் - மூடிவையார்கள்-(அதுபோல) புறம் நட்டு-புறத்திலேசிநேகித்து, அகம் வேர்ப்பார் - உள்ளேகோபங்கொண்டிருப்பவருடைய, நச்சுப்பகைமை-விஷத்தைப்போன்ற பகைத்தன்மையை, வெளியிட்டு-வெளிப்படுத்தி, வேறு ஆதல் வேண்டும் - வேறுபடுதலேதகுதி, கழிபெரு கண்ணோட்டம் - மிகுந்ததாக்ஷிணியம், செய்யேல் - செய்யாதே. (53)

புண்ணை அறுத்துஆற்றுமல்மூடிவைத்தவர்களை அப்புண் கொல்வதுபோல உட்பகையுடையாரை அவர்பகைக்குணத்தை வெளிப்படுத்திநீக்காவிடில்தம்உயிரைஇழக்கச்செய்வரென்பதுகருத்து. நட்டு - இறந்தகாலவினையெச்சம், நள்-பகுதி, ட் - இறந்தகாலஇடைநிலை, உ-வினையெச்சவிகுதி, ளகரம் டகரமானதுசந்தியால்வந்தவிகாரம். நந்து, நத்துஎனவழங்குதல்போல நஞ்சு,நச்சுஎனவந்தது. செய்யேல்ஏவலொருமை எதிர்மறைவினை; ஏவலொருமை எதிர்மறையைக்காட்டுவது ஏல்-விகுதி. வைத்துமூடார் என்பதில்நிலைமொழிவருமொழிகளைப்பின்முன்னாகநிறுத்தி விகுதிகளைப்பிரித்துப் பொருளுரைக்கவும். கழிபெரு, ஒருபொருட்பன்மொழி.

நட்பிடைக் குய்யம்வைத் தெய்யா வினைசூழ்ந்து
வட்கார் திறத்தராய் நின்றார்க்குத்-திட்பமாம்
நாளுலந்த தன்றே நடுவ ணடுவின்மை
வாளா கிடப்பன் மறந்து.

இ-ள், நட்பிடை-சிநேகத்தில், குய்யம்வைத்து-வஞ்சித்தலை வைத்து, எய்யாமை-அறிவின்மையாகிய, வினை-பொல்லாங்கை, சூழ்ந்து-ஆராய்ந்துகொண்டு, வட்கார்-பகைவருடைய, திறத்தர் ஆய்-தன்மையையுடையாராகி, நின்றார்க்கு-இருந்தவர்

க்கு, திட்பம்ஆம-(வாழ்தற்கு) பலமாயுள்ள, நாள்-ஆயுள், உல ந்தது அன்று - முடியவில்லை, நடுவன் - யமன், நடு இன்மை-(இவர்கள் இறப்பதற்குக் காரணமாகிய) நடுநிலைமை யில்லாமையை, மறந்து-மறந்துவிட்டு, வாளா-சும்மா, கிடப்ப ன்-இருப்பான்போலும். (54)

எனவே வஞ்சகமாகச்சிநேகித்துக் கெடுதிசெய்ய நினைப் பவர்க்கு ஆயுள் முடியாதாயினும இடையில் அவர்மடிவா ரென்பது குறிப்பாற்கொள்ளப்படும. சிநேகத்தில் வஞ்சனை வைத்தென்றது,வஞ்சமாகசிநேகித்து என்றபடி. எய்யாமை-பண்புப்பெயர் ; எய்யாவினை-என்பதைப்பண்புத்தொகைநிலை த்தொடரென்க. வட்கார் - எதிர்மறைவினையாலணையும்பெய ர ;வட்கு-பகுதி, ஆ - எதிர்மறைவிகுதி, உகரக்கேடு சந்தியால் வந்தவிகாரம், அனைத்துமொருபகுதி, ஆர்-பலர்பாற்படர்க்கை விகுதி, கூசார்-என்பதுபொருள். திட்பம-பண்புபெயர் ; திண-பகுதி, பம்- பகுதிப்பொருள்விகுதி, ணகரம்டகரமானது சந்தி யால்வந்தவிகாரம்.

மனத்தசெறுப்பெனி னல்ல செயினும்
அனைத்தெவையுந் தியவே யாகும - எனைத்துணையும
தீயவே செய்யினு நல்லவாக்காணபவே
மாசின் மனத்தி னவர்.

இ-ள். கறுப்பு-(ஒருவன்மேல்) மிககோபம், மனத்தனெனி ன்-தம்மனதிலுள்ளன ஆனால், நல்ல-நல்லகருமங்களை, செயி னும்-(அவன்)செய்தாலும,அனைத்துஎவையும-அவையெல்லா ம, தீயவே - பொல்லாத காரியங்களாகவே, ஆகும-தோன்று ம. மாசுஇல் - (ஒருவன்மேல்)களங்கமில்லாத,மனத்தினவர்-மனமுடையார், எனைத்துணையும- (அவன்) எவ்வளவுமிகுதி யாக,தீயவே - பொல்லாதகாரியங்களையே, செய்யினும்-செய் தாலும், நல்லஆக - (அவற்றை) நற்காரியங்களாக, காண்ப-நி னைப்பார்கள். (55)

கறுப்புமனத்த, என்றது உயர்வுபற்றி ஒருமைப்பால் பன்மைப்பாலாயிற்று. உயர்வாவது-மிகுதி, நல்ல, தீய, பண்படியாகப்பிறந்த பலவின்பாற்பெயர்கள். அனைத்தெனவையும், இருபெயரொட்டுப்பண்புத்தொகை நிலைத்தொடர். மனம்-பகுதி; அத்து, இன் - சாரியை; மகரமும், சாரியை முதலகரமும், ஈற்றுகரமுங்கெட்டதும், வகரந்தோற்றமுஞ் சந்தியால், வந்தவிகாரங்கள், அர்-பலர்பாற்படர்க்கைவிகுதி.

இனியவ ரென்சொல்லினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியுங் கடுவே - அனல்கொளுந்தும்
வெங்கார மெய்தெனினுநோய்தீர்க்கு மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும்.

இ-ள். அனல்-தீப்போல, கொளுந்தும்-சுடும், வெங்காரம்-வெங்காரமானது, வெய்து எனினும்-வெப்பமுடையதாயினும், நோய் தீர்க்கும்-நோயை நீக்கும், சிங்கி-விஷமானது, மெய் பொடிப்ப - உடல் புளகிக்கும்படி, குளிர்ந்தும்-குளிர்ந்திருந்தும், கொல்லும் - கொல்லும் [அதுபோல] இனியவர் - அன்புடையார், என்சொலினும்-(காதுக்கு) இனிமையல்லாதசொல்லைச்சொல்லினும், இன்சொல்லே-(அதுபொருளால்) இனியசொல்லேயாம், இன்னார் - அன்பில்லாரது, கனியும் - (காதுக்கு) இனிமையான, மொழியும் - சொல்லும், கடுவே -[பின் தீங்குதருதலால்] விஷமேயாம். (56)

இனியவர் பண்படியாகப்பிறந்த பெயர்; ஈறுதிரிந்த குறிப்புவினைப்பெயரெனினும்பொருந்தும். இனிமை-பகுதி, அ-சாரியை, அர்-பலர்பாற்படர்க்கை விகுதி, மை-ஈறுகெடுதலும், யகரவகரத்தோற்றமுஞ் சந்தியால்வந்தவிகாரங்கள். இன்சொல்-பண்புத்தொகைநிலைத்தொடர்; விரித்தால் இன்பமாகியசொல் எனவிரியும். இன்னார், பண்படியாகப்பிறந்த பெயர்; இன்னாமை-பகுதி, அர்-பலர்பாற்படர்க்கைவிகுதி, மகரஐகாரக்கெடு

சந்தியால்வந்தவிகாரம், விகுதி அகரக்கேடு முதற்குறை; நக ரமெய் விகுதியெனினும் பொருந்தும.

பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காது - மெய்யில்
புலமைந்துங் காத்து மனமா சகற்றும்
நலமன்றே நல்லா றெனல்.

இ-ள். பொய் என்று-பொய்யும், குறளை என்று - புறங்கூற லும, வல் சொல்என்று - கடுஞ்சொல்லும், பயனிலஎன்று-பயனில்லாச் சொற்களும், இந்நான்கும்-ஆகிய இந்நான்குவாக் குக் குற்றங்களும,சொல்லின்-நம்சொல்லில், எய்தாமை-பொருந்தாமலும, மெய்யில்-உடம்பில், புலம் ஐந்தும் - ஐம்புலங் ளும, வழுக்காது-நெறிதப்பிச்செல்லாமலும், காத்து-காத்து க்கொண்டு, மனமாசு-காமவெகுளி மயக்க மாகியகுற்றங்களை யும், அகற்றும் - [ஒருவர்] நீக்கி நடக்கும், நலம் அன்றே- நன்மையே, நல் ஆறு - நன்னெறி, எனல்-என்று சொல்லப்ப டுவது. (57)

மனமொழிமெய்யென்னும் மூன்றிடத்தும் குற்றமில்லாமல் ஒழு குதலே நல்லொழுக்க மெனப்படும். குறளை என்னுஞ் சிறுமை ப்பொருளதாகிய பண்புப்பெயர் புறங் கூறலுக்கானது பண் பாகுபெயர். பயனில-பண்படியாகப்பிறந்த பலவின்பாற்க்கை க்குறிப்பு வினைப்பெயர். என்றென்னும் எண்ணிடைச்சொல் லைப்பொய்குறளைவன்சொல் என்பவற்றோடுங் கூட்டுக.நன்-சு ருக்கு-கடுஎ. நான்கு, ஐந்து, என்னலளவையாகுபெயர். எய் தாமை எதிர்மறைவினையெச்சம்; எய்து - பகுதி, ஆ - எதிர் மறைவிகுதி, உகரக்கேடுசந்தியால்வந்தவிகாரம், அவைந்தும் ஒருபகுதி, மை-எதிர்மறைக்கண்வரும் வினையெச்ச விகுதி.

நல்லா றொழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லவை செய்தற் கொருப்படார் - பல்பொறிய

செங்கட் புலியே றறப்பசித்துந் தின்றாவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ்.

இ-ள். பல்பொறிய - பலபுள்ளிகளுள்ள, செம்கண் - சிவந்தகண்களுடைய, புலிஏறு - ஆண்புலிகள், அற-மிக, பசித்தும் - பசியடைந்தும், பைங்கண் - ஈரமான இடமுடைய, புனத்த - புனத்திலுள்ள - பைங்கூழ்-பயிர்களே, தின்றாஆம்-உண்ணுஆம்(அதுபோல) நல்லஆறு - நன்னெறியில், ஒழுக்கின்தலை - நடப்பதில், நின்றார் - தவறாதவர்கள், நல்கூர்ந்தும-வறுமையடைந்தும், அல்லன-பாவத்தொழில்களே, செய்தற்கு-செய்வதற்கு, ஒருப்படார் - உடன்படார். (58)

ஒழுக்கு, ஒழுகு-என்னும் முதனிலைதிரிந்த தொழிற்பெயர். பெரும்பாலும்பொய்முதலிய பாவத்தொழில்களேச்செய்தல் தரித்திரமடைந்த போதாதலால் நல்கூர்ந்து மென்ற உம்மை உயர்வுசிறப்பு. அல்லன-என்பது பலவின்படர்க்கைக்குறிப்பு வினைப்பெயர். முன் நல்லாறென்றதனால் அல்லனஎன்பது பாவத்தொழில்களுக்காயிற்று. ஒருப்படார்-ஒருசொல்லின் தன்மையதாகிய பலர்பாற்படர்க்கை எதிர்மறைவினை; ஒருப்படு-பகுதி, ஆ-எதிர்மறைவிகுதி, ஒ கரக்கேடு சந்தியால்வந்தவிகாரம், அனைத்துமொருபகுதி, ஆர்-பல்லோர்படர்க்கைவிகுதி, விகுதிஆகாரகேடு முதற்குறை.

குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கொள்ளுந் திருவும் - நயம்விற்றுங்
கூறுமைபும் வாழ்வு முரிமைவிற் றுணைப ஊடம்
நாறேறும்பிக் காத்த நிலை.

இ-ள். குலம் - தன்குலத்தை, விற்று - முழுமையும்விட்டு, கொள்ளும் - அடைகிற, வெறுக்கையும் - பொருளும், வாய்மைநலம் - உண்மையாகிய நன்மையை, விற்று - முற்றும்விட்டு, கொள்ளும் - அடைகிற, திருவும் - செல்வமும், நவம

விற்று-தவத்தைமுற்றும்விட்டு, ஊன்-உடம்பை, ஓம்பும்-காக்கின்ற, வாழ்வும் - வாழ்க்கையும், உரிமை-தன் வமிசத்துக்குரியவற்றை, விற்று-ஒருவர்வசமாக்கி, வாழ்வும் - சீவனஞ்செய்வதும், [ஆகியஇவற்றை] தான் ஓம்பிக்காத்தால் - (தன்னிடத்துண்டாகாமல்ஒருவன்) காத்துக்கொள்ளலே, தலை-முதன்மையான தருமமாம். (59)

குலம் விற்றலாவது:பொருளுக் காசைப்பட்டுத்தன்னின் இழிகுலத்தாரோடு சம்பந்தஞ்செய்தல். வாய்மைநலம் விற்றலாவது,பொருளுக்காகப் பொய்ச்சாக்ஷிமுதலியனசொல்லல். தவம்விற்றலாவது,உடல்வலிகுறையாதிருக்கும்படி மேற்கொண்டவிரதத்தைவிடல்.உரிமைவிற்றலாவது,தரித்திரம் நீங்குதற்காகத்தன்வமிசத்துக்குரிய சுதந்தரத்தை ஒருவர்வசமாக்கிப் பொருள்பெற்றுண்ணல். ஆங்கு-அசை. ஓம்பிக்காத்தல்ஒருபொருட் பன்மொழி.ஊன்-கருவியாகுபெயர்.உரிமை-பண்பாகுபெயர். அளபெடை, இன்னிசை.

பெற்ற சிறுகப் பெறுத பெரிதுள்ளும்
சிற்றுயிர்க் காக்க மரிதம்மா - முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழன் மாயா திரா.

இ-ள். வல்விராய்-வன்மையாகியவிறகு, வரவர-(தன்னிடத்து) வந்துகொண்டிருக்க, முற்றும் - முழுமையும், வாய்மடுத்து - உண்டு அல்லது எரித்து, மாய(அவ்விறகு) மாண்டால், எரிதழல்-எரிகின்ற தீ, மாயாது இராது-கெடாமலிராது-[அதுபோல] பெற்ற - அடைந்தபொருள்கள், சிறுக - குறைவுள்ளவை ஆகவும், பெறுத-அடையாதபொருள்களை,பெரிதுஉள்ளும்-மிகுதியாகவும் நினைக்கின்ற, சிறுஉயிர்க்கு- சிலவாழ்நாளையுடைய உயிர்க்கு, ஆக்கம்-செல்வம், அரிது - இல்லையாம். (60)

அடையாதமுன் பெருமையுள்ளனவாக நினைத்தபொருள்களை அடைந்தபின் சிறுமையுள்ளனவாக இவன் நினைக்க

லால் இவன்கருத்தை அப்பொருள்களின்மேல் ஏற்றிப்பெற்ற சிறுகஎன்றும், இவ்வாறுஎண்ணும்இழிவு நோக்கிச் சிற்றுயிரொன்றுஞ்சொல்லினர். பெற்ற, பெறாத,தொழிற்பெயர்கள். சிறுக-செயவெனெச்சம் ; சிறுகு-பகுதி. பெரிது-குறிப்புவினையெச்சம். அரிது-இல்லாமையைக்குறித்துநின்றது.

தத்த நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே
ஒத்த கடப்பாட்டிற் றாளூன்றி - எய்த்தும்
அறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள்.

இ-ள். பொருள் - பொருளானது, தத்தம் - தங்கள்தங்களுடைய, நிலைக்கும் - நிலைமைக்கும், குடிமைக்கும் - குடிப்பிறப்புக்கும், தப்பாமே-தப்பாமல், ஒத்த-ஒத்துள்ள, கடப்பாட்டில்-முறைமையில், தாள்ஊன்றி-விடாமுயற்சிசெய்து, எய்த்தும்-வருந்தியும், அறமகடையில் - பாவவழியில், செல்லார்-செல்லாதவராகி, பிறன்பொருளும்-பிறனுடையபொருளையும், வெஃகார் - இச்சியாதவருடைய, புறங்கடையது ஆகும - தலைவாயிலுள்ளதாகும். (61)

பொருள்,அவர் வேண்டுங் காலத்தை எதிர்பார்த்துக் காக்குமென்பதையறிவிக்க புறங்கடையதாகும் பொருளென்றார். தத்தம் என்னும்அடுக்குத்தனிமைப்பொருள்தருகிறது. தப்பாமே எதிர்மறைவினையெச்சம்; தப்பு-பகுதி, ஆ-எதிர்மறைவிகுதி, உகரக்கேடு சந்தியால்வந்தவிகாரம், அனைத்து மொருபகுதி,மே-எதிர்மறையில் வரும் வினையெச்சவிகுதி. கடப்பாடு, முதனிலைதிரிந்த தொழிற்பெயர் ; கடமை என்னும் பண்போடு படு என்னுமுதனிலை வினைபுணர்ந்தபோது,மை விகுதி கெட்டு ப்பகரந்தோன்றி, ஒருசொல்லின்தன்மையதாகிய கடப்படு என்பது முதல்நீண்டு நின்றது. பாவம் அறத்தி னின்றும் நீக்கப்பட்டதாதலால் அறங்கடை என்னப்பட்டது.

வள்ளன்மையில்லா தான்செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல - கொன்னே
அருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப்படான்.

இ-ள். மற்றையோன் - ஈகைக் குணமுடையான், அருள் இலன் என்று - (உயிர்களிடத்து) கிருபையில்லாதவ னென்றும், கண் அறையன் என்று - (பழகினவரிடத்து) தாக்ஷிணியமில்லாதவ னென்றும், பலரால் உம - பலராலும், கொன்னே-காரணமில்லாமலே, இகழப்படான் - நிந்திக்கப்படான், (ஆதலால்) வள்ளன்மை - ஈகை, இல்லாதான் - இல்லாதவனுடைய, செல்வத்தின் - செல்வத்திலும், நல்குரவே -(அவ்வீகைக்குணமுள்ளவனுடைய) தரித்திரங்களே, நனி நல்ல-மிகுதியும் நல்லனவாம். (62)

வள்ளன்மை பண்புப்பெயர் ; வள் - பகுதி, ள் -சந்தி, அல் - பகுதிப்பொருள் விகுதி, மாட்சிமை என்பதிற்போல, மை-விகுதிமேல் விகுதி;வள்ளன்மையில்லாதான்-எழுவாய்த்தொகாநிலைத்தொடர் ; இதுதிணைவழுவமைதி, இல்லாதான்-குறிப்புவினைப்பெயர். மற்றையோன் இடைச்சொலடியாகப் பிறந்தபெயர். கண்ணறையன்-தொழிலடியாகப்பிறந்த ஆண்பாற்பெயர் ; கண்ணறு - பகுதி, ஐ - செயப்படுபொருள்தரும் விகுதி, உகரக்கேடு சந்தியால்வந்த விகாரம் ; கண்ணறை-என ஒருமைப்பால் மூன்றுக்கும பொதுவாய்நின்ற பொதுமையை நீக்கவந்த அன் - ஆண்பாற்படர்க்கை விகுதி, ய் - சந்தி.

ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல்
ஓவேகொடிது கொடிதம்மா - ராகொன்று
நீவினைக் கம்மியனுல் வாய்பூட்டிடப்படின்மற்
றுவா லிவனொன்செய் வார்.

இ - ள், ஈகை - கொடுக்குஞ்செய்கை, அரிது எனினும்-(சிலர்க்கு) இல்லையாயினும், இன்சொலினும் - இன்சொல்சொல்லுதலிலும், நல்கூர்தல் - இல்லாதவராகுதல், ஓவோ - ஐயோ, கொடிது கொடிது - மிகுதியுங்கொடுமையுள்ளது, அம்மா - இது ஆச்சரியம், தீவினை - பாவமாகிய, கம்மியனால் - கம்மாளனால், நாகொன்று - நாக்கின்பலத்தையடக்கி, வாய் பூட்டிடப்படின் - (இன்சொல்சொல்லவொட்டாமல்) வாய் பூட்டப்பட்டால், இவர் - இவர்கள், ஆவா - ஐயோ, மற்று என்செய்வார் - வேறுயாதுசெய்வார். (63)

சிலர் அறத்தின்பொருட்டுக் கொடுக்காவிட்டாலும் இன்சொல்லாயினுஞ் சொல்பவராயிருக்க, அதுவுஞ் செய்யாமைக்குக்காரணம் அவருடையபாவமே ஆமென்பது கருத்து. ஓஓ, ஆஆ, இரண்டும் இரக்கப் பொருள்தரும் இடைச்சொற்கள். ஓவோ என்பதை ஓகோ என்பதாகச்சொல்வது முண்டு. உம்மை-உயர்வு சிறப்போடு எதிரதுதழீஇயது; பின்னுள்ளது இழிவு சிறப்போடு இறந்தது தழீஇயது; கொடிது - குறிப்புவினைமுற்று. அடுக்கு மிகுதிப்பொருளது.

சொல்வன்மை யுண்டெனிற் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல - வல்லைத்தம்
ஆக்கங் கெடுவ துளதெனினு மஞ்சுபவோ
வாக்கின் பயன் கொள்பவர்.

இ - ள். சொல்வன்மை - (பிறர் ஏற்றுக்கொள்ளத்தக்க) சொல்லின்வலி, உண்டு எனின் - (ஒருவனுக்கு) உளதானால், கொன்னே-பயனில்லாமலே, விடுத்தொழிதல் - விட்டுவிடல், நல்வினை-செல்வாக்குக்குக் காரணமாகிய நல்வினையை, கோறலின் - கொல்லுதலினின்றும், வேறு அல்ல - வேறன்றாம், வாக்கின் - சொற்செலவால் வரும், பயன்கொள்பவர் - பயனைக்கொள்ளவல்லவர், வல்லை - விரைவில், தம்ஆக்கம்-தமது

செல்வம், கெடுவதுஉளதுஎனினும் - கெடுதலுள்ளதாயினும், அஞ்சுபவோ-அஞ்சிவிட்டொழிவாரோ, விட்டொழியார்.(64)

வாக்குதவித்திறம் ஒருவனுக்கு இருந்தால் பிறர்க்கு வேண்டும்போது பயன் படுத்தல்வேண்டும். விடுந்தொழிதல்- தொழிற்பெயர் ; விடு-பகுதி, ந்-சந்தி, து-சாரியை, ஒழி-துணிவுப்பொருள் விகுதி, உகரக்கேடு சந்தியால்வந்த விகாரம், அனைத்துமொருபகுதி, தல் - புடைபெயர்ச்சி விகுதி, கேடலின்- இதில் ஐந்த னுருபு நீங்கற்பொருளது. அழிந்தலைப்பார்க்கினும் வேறல்ல எனப்பொருள்கொண்டு எல்லைப்பொருளதெனினும் பொருந்தும். அல்ல-இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாகிய குறிப்புவினைமுற்று.

> சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்
> பெறுமெனிற் றாழ்வரோ தாழார் - அறனல்ல
> எண்மைய வாயினுங் கைவிட் டரிதெனினும்
> ஒண்மையிற் றீர்ந்தொழுக லார்.

இ - ள். அறன் அல்ல - பாவங்கள், எண்மைய ஆயினும் - (செய்ய) எளியனவாயிருப்பினும், கைவிட்டு - நீக்கிவிட்டு, அரிது எனினும் - (செய்ய) அரிதாயினும், ஒண்மையின் - அறத்தினின்றும், தீர்ந்து - நீங்கி, ஒழுகலார் - நடக்க அறியாதவர்கள், சிறுமுயற்சி செய்து - சிறிய முயற்சியைசெய்து, ஆங்கு - அத்தொழிலில், உறுபயன் - பெரும்பயனை, கொள்ள - தாம் அடைய, பெறும் எனின் - (அம்முயற்சியால் தாம்) பெறுவராயின், தாழ்வரோ - தாமதிப்பரோ, தாழார் - தாமதியார். (65)

சிறுமுயற்சி என்றது மேற்கூறிய செல்வாக்கை. சிறுமுயற்சி பண்புத்தொகை நிலைத்தொடர். அறனல்ல - எழுவாய்த்தொகாநிலைத்தொடர். அல்ல-பலவின்பாற்கைக்குறிப்பு வினைப்பெயர். எண்மைய-என்பது குறிப்புவினைமுற்று. ஆயி

னும் என்பதிலுள்ள உம்மை இழிவுசிறப்பு. எனினும்என் பதி லுள்ள உம்மை உயர்வுசிறப்பு.

செயக்கடவ வல்லனவுஞ் செய்துமன் றென்பார்
நயத்தகு நாகரிக மென்னாம் - செயிர்த்துரைப்பின்
நெஞ்சுநோ மென்று தலைதுமிப்பான் றண்ணளிபோல்
எஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று.

இ-ள். செய - (நம்மால்) செய்துமுடிப்பதற்கு, கடவ அல்லனவும் - முடியாதனவற்றையும், செய்தும் மன் - மிகுதியும (நாம) செய்துமுடிப்போம், என்பார் - என்று சொல்பவர், நயத்தகும் - விரும்பத்தக்க, நாகரிகம் - தாக்ஷிணியம், என் ஆம் - என்னபயன்படும், செயிர்த்து - கோபித்து, உரைப்பின் - (கடுஞ்சொல்லை) சொல்லினால், நெஞ்சு - மனம், நோம் என்று - (ஒருவன்) வருந்துவானென்று, தலை - (அவனுடைய) தலையை, துமிப்பான் - வெட்டுவோனுடைய, தண் அளிபோல் - கொடுமையாகிய இரக்க மில்லாமையை சொல்வதுபோல, எஞ்சாது - சிறிதும் ஒழியாமல், எடுத்து உரைக்கல் - (பலர்முன்) எடுத்துச் சொல்லுதலாகிய, பாற்று - தன்மையை யுடையது. (66)

தம்மால் செய்யமுடியாதவற்றையும் உனக்குச்செய்வோமென்று காலங்கழிப்பவரிடத்தில் தாக்ஷிணியம் வையாமல் அவரால் முடியாமையைப் பலரறியச்சொல்லி நீக்குக என்பது கருத்து. இவன் சொல்லாமலிருக்கும் தாட்சிணியம் அவ்வியில்லார் அவ்வாறு சொல்லிக்கொள்வதற்குக் காரணமானதைப்பற்றிச் செய்துமன்னென்பார்நயத்தகுநாகரிகமென்றார். கடவ-பண்படியாகப்பிறந்த பலவின்படர்க்கைக் குறிப்புவினையாலணையும் பெயர் , கடமை-பகுதி, அ - பலவின்படர்க்கை விகுதி, ஈறு போதலும், வகரத்தோற்றமுஞ் சந்தியால். உம்மை, உயர்வுசிறப்பு. செய்தும் தனித்தன்மைப் பன்மை எதிர்

காலவினைமுற்று ; தும-விகுதி தன்மைப்பன்மையையும, எதிர்காலத்தையுமுணர்த்திற்று.

அல்லன செய்யினு மாகுலங் கூழாக்கொண்
டொல்காதார் வாய்விட் டுலம்புப - அல்லால்
பிறர்பிற செய்பபோற் செய்தக்க செய்தாங்
கறிமடம் பூண்டுநிற் பாரார்.

இ-ள். ஒல்காதார்-அடங்காதவர், அல்லன-அறமல்லனவற்றை, செய்யினும்-தாமசெய்தாலும், ஆகுலம்-பலரறிதலையே, கூழாகக்கொண்டு-பயனாகக்கொண்டு, வாய்விட்டு உலம்புப-வாய்விட்டழைவார்கள், அல்லால் - (அப்படி) அல்லாமல், செய்தக்க - செய்தற்குரிய அறங்களை, பிறர்பிற - யாரோ பிறரொருவா, செய்பபோல்-செய்வார் போன்று, செய்து - தாம செய்து, ஆங்கு - அக்காரியத்தில், அறிமடம் - அறிந்தும் அறியார்போலிருந்தலை, பூண்டு - அடைந்து, நிற்பார் - நிற்பவா, ஆர் - ஒருவருமிலர். (67)

செய்தக்க என அடியிற் சொன்னமையால் அல்லன பாவத்துக்காயிற்று. செய், கூழா, என்பவற்றில் விகுதி தொகுத்தல் பெற்றது . உம்மை இழிவுசிறப்பு. பயனைக்கூழென்றது இலக்கணை. வாயினிழிவைச்சிறப்பித்தற்கு வாய்விட்டென்றும், அவர் சொல்லுவன பயனில்லனவென்று அறிவிப்பதற்கு உலம்புபவென்றுஞ் சொல்லினர்.

பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனுக் கொள்வான் - பயமின்று
மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக் கொல்வான்போல்
கைவிதிர்த் தஞ்சப்படும்.

இ - ள். பகை இன்று - பகையில்லாமலே, பல்லார் - பலருடைய, பழி - பழியை, எடுத்து ஓதி - எடுத்துச்சொல்லி,

நகை ஒன்றே - நகைத்தலொன்றையே, நல்பயன் ஆக - பெரும்பயனாக, கொள்வான் - கொள்ளுமியல்புடையான், பயம் இன்று - (தனக்குவேறு) பயனில்லாமல், மெய்விதிர்ப்பு - (மற்றவனுடைய) உடலின்நடுக்கத்தை, காண்பான் - காணும் பொருட்டு, கொடிறு - கொடிற்றை, உடைந்து - உடைத்து, கொல்வான்போல் - வருந்து மியல்புடையானுக்கு நடுங்கி அஞ்சுதல்போல, கைவிதிர்த்து - (பிறரால்) கைநடுங்கி, அஞ்சப்படும் - அஞ்சப்படுவான். (68)

இன்று-இரண்டும் இன்றி என்னும் குறிப்புவினையெச்சத்தின் திரிபு. ஏ-பிரிநிலை. நல்பயன் - பண்புத்தொகை நிலைத்தொடர்; விரிந்தால் நன்மையாகிய பயன் எனவிரியும். மை-ஈறு கெடநின்ற நல என்னும் பண்புப்பெயரினீற்றுலகரமமெல்லின முதன்மொழி முன் னல்லனவொனத் திரிதல்போல வல்லின முதன்மொழி முன் றுய் ன்-சுடு-ரு-எகூ-இன் படி திரிந்தது.வன்கணம், வெண்பல், அகன்குளம் என்பொருள்என மற்றப்பண்பீற்று லகர ளகரங்களும் அவ்வாறுனகரணகரங்களாகத்திரிதல் காணக.

தெய்வ முளதென்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும் - தெய்வம்
இலதென்பார்க் கில்லைதம மின்புதல்வர்க் கன்றே
பலகாலுஞ் சொல்வார் பயன்.

இ - ள். தம் - (தந்தையர்) தமமுடைய, இன்புதல்வர்க்கு அன்றே - நல்ல புத்திரர்களுக்கே, பயன் - பயனுள்ளமொழியை, பலகாலும் - பலதரமும், சொல்வார் - சொல்வார்கள் (அதுபோல) தெய்வம் உளது - தெய்வம் உண்டு, என்பார் - என்று அஞ்சி நடப்பவர், தீய - கெடுதியான வற்றை, செயப்புகின் - செய்யத் தொடங்கினல், தெய்வமே - அத்தெய்வமே, கண் இன்று - தாட்சிணிய மில்லாமல், நின்று - எதிர்நின்று, ஒறுக்கும் - தண்டிக்கும், தெய்வம் - தெய்வமானது,

இலது என்பார்க்கு - இல்லை என அஞ்சாது நடப்பவர்க்கு, இல்லை - (அவ்வாறு தண்டித்தல்) இல்லை. (69)

தெய்வம் இலதென்பார்க்கு தண்டித்தலில்லைஎன்றதால் இவரை மறுமையில் நரகவேதனை முதலியவற்றால் தண்டித்தலால் இம்மையில் இல்லை என்றபடி ; தெய்வம்- சொல்லால் அஃறிணை ஆதலால் உளது, இலது, என்னும் அந்திணைவினை கொண்டது. ஏ-பிரிநிலை. தேற்றப்பொருளதாகிய அன்றே-ஓருசொல்லாகிய இடைசசொல், உமமை-முற்றும்மை.

தீய செயல் செய்வா ராக்கம் பெருகினும்
தீயன தீயனவே வேறல்ல - தீயன
நல்லன வாகாவா நாவின் புறநக்கிக்
கொல்லுங் கவயமா போல்.

இ-ள்- நா - நாவினால், இன்பு உற - இன்பம் உண்டாக, நக்கி-நக்கி, கொல்லும்-பின்கொல்லுகிற, கவயமாபோல-காட்டுப்பசுவைப்போல, தீய செயல் - பொல்லாங்கான செய்கையை, செய்வார் - செய்பவர்களுடைய, ஆக்கம்-செல்வங்கள், பெருகினும் - முன்பெருகினாலும், தீயன-கெடு தொழிலால்வந்த செல்வங்கள், தீயனவே-துன்பந்தருவனவேஆம்,வேறு அல்ல-இன்பந்தருவன அல்ல,(ஆதலால்)தீயன-தீயவை, ஆகா-அடைதற்குரியன அல்ல, நல்லன - நல்லவை, ஆம் - அடைதற்குரியன. (70)

தீய பண்படியாகப்பிறந்த குறிப்புப்பெயரொச்சம்;தீமை-பகுதி,ய்-சந்தி, அ-பெயரொச்சவிகுதி, மகரஐகாரக்கேடு சந்தியால்வந்தவிகாரம். செயல் செய்வார்-நிலைமொழி அஃறிணைப் பெயராதலாலும், இப்புணர்ச்சி இரண்டாம்வேற்றுமைத்தொகைப்புணர்ச்சியாதலாலும், நன் - சுரு-ரு-எம-இன்படி நிலைமொழியீற்று லகரம் திரியாமல், நன்-சு-ரு அடு-இன்படி விகாரத்தியல்பாயிற்று.

நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயும்
செந்நெறிச் செல்வாரிற் கீழல்லர் - முன்னைத்தம்
ஊழ்வலி யுன்னிப் பழிநாணி யுள்ளுடைவார்
தீய செயினுஞ் சில.

இ-ள். தம் - தம்முடைய, முன்னை - பழமையாகிய, ஊழ்வலி-ஊழ்வினையினது வலியை, உன்னி-(தமஅநுபவத்துக்குக் காரணமாக) நினைத்து, பழி-பழிக்கு, நாணி-கூசி, உள்உடைவார் - மனம்வருந்துவோர், சிலதீய - சிலபொல்லாங்குகளை, செயினும - செய்தாராயினும். [அவர்] நல்மக்கள் - நல்லோருடைய, செம்நா-உண்மையைச்சொல்லும்நாவில், தழும்புஇருக்க-புகழ்ந்த தழும்புமாறுதபடி, நாள்வாயும்-நாள்தோறும்,செம்நெறி-நல்வழியில், செல்வாரின்-நடக்கின்றவர்களினின்றும், கீழ் அல்லர் - தாழ்ந்தவரல்லர். (71)

நாக்குக்கு உண்மை கூறுதலின்மேற் பட்டநன்மை வேறில்லாதபடியால் செமமைக்கு உண்மைகூறுதலெனப்பொருள் கொள்ளப்பட்டபோதினும், செந்நா-பண்புத்தொகைநிலைத்தொடர். விரிந்தால் செய்மையாகிய நா எனவிரியும். தழும்பு-முதனிலைத்தொழிலாகுபெயர், முதலிலுள்ள உம்மை முற்றும்மை;ஈற்றிலுள்ள உம்மை சிலதீயவுஞ் செய்யாரெனப்பொருள் தரலால்எதிர்மறையும்மை. தீய-பண்படியாகப்பிறந்த பலவின்பாற் படர்க்கைப்பெயர்.

கற்புடுத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு - மக்கட்பே
றென்பதோர் செல்வமு முண்டாயி னில்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு.

இ-ள். கற்பு - கற்பாகிய உடையை, உடுத்து - தரித்து, அன்பு - அன்பாகிய மலரை, முடித்து - முடித்து, நாண் - நாணமாகிய சந்தனத்தை, மெய்பூசி - உடமபில பூசி, நற்கு

ணம் - நற்குணமும், நற்செய்கை - நற்செய்கையு மாகிய ஆப ரணங்களை, பூண்டாட்கு - பூண்டவளுக்கு, மக்கட்பேறு என் பது - பிள்ளைபபேறென்பதாகிய, ஓர்செல்வமும் - ஒப்பற்ற செல்வமும், உண்டாயின்-உண்டாயிருந்தால், கொண்டாற்கு- கணவனுக்கு, செய்தவம் - செய்த தவப்பயன், வேறு இல் அ ன்றே - வேறுஇல்லையாம். (72)

மக்கட்பேறு இரண்டாம் வேற்றுமைத்தொகைநிலைப் புணர்ச்சி யாதலாலும், நிலைமொழி உயர்திணைப்பெயராதலா லும் - நன் - சுரு - கு - டுக - இன்படிநிலை மொழியீற்றுளகரம் இயல்பாகாமல், அடு - இன்படி,இயல்பின் விகாரமாயிற்று. பேறு-முதனிலைதிரிந்த தொழிற்பெயர். அன்றே-தேற்றப் பொருள் தரும் இடைச்சொல்.

அன்பொ டருளுடைய ரேனு முயிர்நிலைமற்
றென்பியக்கங் கண்டும் புறந்தரார்-புன்புலாற்
பொய்க்குடி லோம்புவரோ போதத்தாற் றம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார்.

இ-ள். அன்போடு - அன்புடனே, அருள் - கிருபையை, உடையர் ஏனும்-உடையாராயினும், என்பு-எலும்பு,இயக்கம்- மேலெழுந்துதோன்றல், கண்டும்-உண்டாகியும், உயிர்நிலை தம்முடம்பை, புறந்தரார்- (அன்பும் அருளும்வைத்து) காப் பாற்றார், (ஏனெனில்) போதத்தால்-ஞானமாகிய மேற்பாப் பால், தாம்வேய்ந்த-தாம்கூரைவேய்ந்த, புக்கில்-மோட்சமாகிய வீட்டில், குடிபுகுதுவார்-குடிபோக எண்ணுவோர், புல் புலால்-இழிவாகிய ஊனால் ஆன, பொய்க்குடில்-நிலையில்லாததாகிய உடலென்னுங் குடிசையை,ஓம்புவரோ-காப்பாரோ காக்கார். (73)

அன்பு -தம்மோடு சம்மந்தமுடைய உயிர்களின்மேல் வைக்கும்பரிவு. அருள் சம்மந்தத்தாலல்லாமல் இயல்பாக எல்

